*Ūḻiyaṉ*

*Malar 14, itaḻ 24*

*December 14, 1934*

Record no. 148

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கச. சென்னை, பவஞு கார்த்திகைமீ 29உ வெள்ளி (14-12-1934) இதழ் உச

*இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா*
*தனமேறி ஈடி லாது*
*சொந்தவர் சேபுரியத் துயர்போக்கி*
*யாவருமே சுகவாழ் வெய்த*
*இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்*
*இழிவுயர்வென் இயற்கை ஓங்க*
*நந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்*
*நல்லனவெந் நாளும் வாழ்க!*

## சில தலைவர்கள்

இந்திய மக்களால் பெரிதும் மதிக்கப்படும் சில தலைவர்கள் என்றென்றும் அரசாங்கத்தாரின் கண்ணோட்டத்திற்கு இலக்காகிக் கொண்டே யிருக்கின்றார். காங்கிரஸ், அரசாங்கச் சட்டங்களை மீறிப் போர்தொடுத்த நாளில் அதன் தலைவர்களும் ஊழியர்களும் ஆயிரக் கணக்கில் சிறைப் படுத்தப்பட்டனர். அதை வேண்டுமானால் சரியென்று வைத்துக் கொள்வோம். காங்கிரஸ் சட்ட மறுப்பை விடுத்து அமைதியான காரியங்களைச் செய்து கொண்டிருக்கும்போதும், அதன் மதிப்புயர்ந்த தலைவர்களில் சிலர் விடுதலை செய்யப்படாம லிருப்பதும், வேறு சிலர் புதிதாகப் பிடிக்கப்படுவதும், இந்திய மக்கள் உள்ளத்தைப் பெரிதும் புண்படுத்தும் செய்கைகளல்லவா?

சட்டமறுப்பு அடியுடன் நிறுத்தப்பட்டுப் பல மாதங்களாகியும் இந்தியர் உயிரெனப் போற்றும் விரல்விட்டு எண்ணத்தக்க ஒரு சில பெருந் தலைவர்களுள் ஒருவராகிய ஜவகர் விடப்படவில்லை. அப்பெரியாரின் அருமை மனைவியார் பலமாகப் பிணியால் தாக்குண்டு படும் இன்னல் கொஞ்சமல்ல. அவரோடு அருகிருக்க வாய்க்கவில்லை ஆருயிர்த் தோழருக்கு. அவர் விடுதலைக்கு எவ்வளவோ மன்றாடினர் இந்திய மக்கள். பார்லிமெண்டிலும் பல முறை முயற்சிகள் நடந்தன. எனினும் இன்னும் விடுதலையில்லை. அவர் சிறையிலேயே வாழுகின்றார்; அவர் தம் காதலி, காதலனின்றித் தனித்து நின்று எமனோடு ஓயாப் போர் தொடுத்து அயர்ச்சி யுற்றிருக்கின்றார். சினிமாக் காட்டுவதுபோல் ஜவகரைக் கொணர்ந்து அவர் தம் அருமைக் கமலாமுன் காட்டிக்காட்டி மறைக்கப்படுகிறது. அந்தோ! இந்த விளையாட்டு எற்றுக்கு! ஜவகரை விட்டுவிடுவதால் ஒரு மோசமும் இல்லை. அப்படி ஏதும் அவர் செய்து விடுவாரானால் திரும்பப் பிடிப்பது பிரமாதமுமல்ல. அவர் நிலை அவ்வாறாக,

எல்லைப்புறக் காந்தி யெனத் தேசம் முழுதும் போற்றிப் புகழும் கான் அப்துல் கபூர்கான் அவர்கள் சமீபத்தில்தான் விடுவிக்கப்பட்டார். விடுதலையோடு எல்லைப்புறம் பஞ்சாப் மாகாணங்கட்குள் நுழையக் கூடாதென்ற நிபந்தனையும் விதிக்கப்பெற்றார். அந் நிபந்தனையையும் அவர் ஏற்றே நடந்திருக்கின்றார். அவர் இந்த வாரம் கைது செய்யப்பெற்றார். காரணம் காங்கிரஸ் வாரத்தில் அப்பெரியார் பம்பாயில் ஆற்றிய சொற்பெருக்கு. அன்னார் பேச்சில் இராஜத் துவேஷம் இருப்பதாக 124 ஏ பிரிவுப்படி அவர் பிடிக்கப்பட்டிருக்கின்றார். வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. எனவே வழக்கின் போக்கைப்பற்றி நாம் ஒன்றும் சொல்லப் போவதில்லை. சமாதான காலத்தில் எதையேனும் கொண்டு இப்படி நடவடிக்கை எடுப்பதை இந்தியர் பலமாகக் கண்டிக்கின்றனர். அதையே இங்கு நாமும் கூறுகிறோம். இதே மாதிரி டாக்டர் சத்தியபாலும் 124 ஏ-ப் பிரிவினால் கைது செய்யப்பெற்றிருக்கின்றார். இந்தச் சமயத்தில் எல்லைப் புறக் காந்தியை, மகாத்மா காந்தி, எதிர் வழக்காடும்படி செய்தது சாலவும் பொருத்தமுடையதே யாகும். இயக்கமில்லாக் காலத்

தில் அநாவசியமாகச் சிறை செல்லவேண்டாம் என்பதே அடிகள் கருத்து. அந்தச் சட்டத்துக்குள்ளேயே நுழைந்து குற்றச் சாட்டினின்றும் விடுபட இடமிருக்குமானால் இச்சந்தர்ப்பத்தில் அது செய்து தீரவேண்டுவதே. சட்டமறுப்புக் காலத்தில் பின்பற்றிய கொள்கையை என்றும் கொள்ள வேண்டுவதில்லை எனக் காந்தியடிகள் கருதியது முற்றிலும் நியாயமாகும். தவிர,

சுபாஷ் சந்திரபோஸ் வியன்னுவினின்றும் இந்தியா வர அனுமதிக்கப்பெற்று வந்து சேர்ந்தார். காரணம் அவர் தம் வயது முதிர்ந்த அருமைத் தந்தையாரைக் கடைசி முறையாகக் காணும் அவாவே. தந்தையைக் காணும் விருப்பமும் கைகூடாது போயிற்று. உண்மையாகவே நமது சுபாஷ் விண் மூலமாகப் பறந்து ஓடோடியும் வந்தார். வந்தும் தந்தையைக் கண்டார் இல்லை. அவர் வரு முன்னரே தந்தையார் ஆவி குடிபோய் விட்டது. இந்நிலையில் பொருத்தமில்லாத—மரியாதைக் குறைவான நிபந்தனை பல அப்பெரியாருக்கு விதிக்கப் பட்டிருக்கிறது. அது தவிர இன்னும் சில வாரங்கள் கூட அவர் வெளியே இருக்க முடியா நிலைமையும் ஏற்பட்டு விட்டது.

அவர் தம் அருமைச் சகோதரர் சரத்சந்திர போஸ் நிலைமையும் ஒருகால் சிறை வாயிற்படிக்கு வெளியிலும் மற்றொருகால் உள்ளுமாகவுமே இருக்கிறது. அவர் விசாரணையில்லா அரசாங்க நிரந்தர விருந்தினர். இப்படிச் சில பெருந் தலைவர்கள்மீது எந்தக் காலத்திலும் அதிகாரிகள் கருணைப் பார்வை மாறாது வீழ்ந்து கொண்டேயிருப்பதைக் கண்டு பாரதமாதா கண்ணீர் வடிக்கின்றாள். அடிமைத் தளைபூண்ட அன்னை வேறு என் செய்வாள்?

# இடி முழக்கம்

### நம் தங்கத்தின் கதி?

இத்தாலியிலிருந்து கடந்த மூன்று மாதங்களில் ஒரு கோடி 35 லட்சம் பவுன் பெறுமான மூள்ள தங்கம் வெளியேறி விட்டது. எனவே அந்நாட்டுத் தங்கக் கையிருப்பில் நாற்பது சத விதம் குறைந்து விட்டதாம். எந்த நாட்டில் தங்கக் கையிருப்புக் குறைந்து விட்டதோ அந்தத் தேசம் உலகத்தில் பொருளாதார அந்தஸ்தில் குறைந்து விட்டதென்பது பொருள்; ஏனெனில் தங்கமே தற்போதிய உலகில் செல்வத்தை அளக்கும் அளவு கோலாக இருக்கிறது. ஆதலால் இத்தாலியன் சர்வாதிகாரி சிஞ்ஞோர் முசோலினி ஒரு புதுச் சட்டத்தை இயற்றி இருக்கிறார். இச் சட்டப்படி வெளி நாட்டிலிருந்து பணம் வரவேண்டிய இத்தாலியர் அனைவரும் அப்பணம் பற்றிய உரிமையைச் சர்க்காரின் தேசிய இன்ஸ்டிட்யூட்டில் ஒப்படைத்துவிட்டு, பதிலாக இத்தாலியன் நாணயங்களைப் பெற்றுக் கொள்ளவேண்டும். இதற்கு யாரேனும் தவறினால் சிறைத் தண்டனையும், அவர்களின் வெளி நாட்டு ஆஸ்திக்குச் சமமான அபராதத்தையும் பெற வேண்டியவராவர். தற்போது முசோலினி இந்தச்சட்டம் போட்டதின்கருத்து யுத்த மேகம் யாண்டும் கறுத்துக் கொண்டிருப்பதினால் தேசப் பொருளாதாரத்தைக் கெட்டிப்படுத்த நினைத்தாயிருக்கலாம். ஆனால் அந்தோ! இந்தியாவின் நிலைமை பரிபூரணமாக வேறு. இதுகாறும் இந்தியாவிலிருந்து 207 கோடி ரூபாய் தங்கம் வெளி நாடுகட்குப் போயிருக்கின்றது. இதன் விளைவென்ன!

### இனிச் செய்வதென்ன?

சமீபத்தில் சென்னை வி. பி. ஹாலில் கூடிப்பிரிந்த ஜஸ்டிஸ் மகாநாட்டுக்குத் தோழர் ஈ. வே. ராமசாமி அவர்கள் 10 தீர்மானங்களை அனுப்பியிருந்ததும், அவற்றைப் பின்னுடி யோசித்துக்கொள்ளலாமென்று மகாநாடு நீக்கி வைத்திருந்ததும் தமிழ்நாடறிந்த உண்மை. கடந்த இரண்டு வாரமாக ஜஸ்டிஸ் கக்ஷியின் கூட்டமொன்று டிசம்பர் 11-ந் தேதி நடைபெறப் போகிறதென்ற பிரஸ்தாபம் வந்ததும், பல சுயமரியாதைச் சங்கங்கள் மேற்படித் தீர்மானத்தை ஆலோசனைக் கெடுத்து நிறைவேற்ற வேண்டுமென்று கனம் பொப்பிலி ராஜா அவர்கட்குத் தந்திமூலமும் கடிதம் மூலமும் தெரிவித்தன. ஆனால் அக்கூட்டம் மேற்படி வேண்டுகோளைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. 11-ந் தேதி குறிப்பிட்டவாறே கூட்டம் நடைபெற்றது; கனம் குமார ராஜா முத்தையா செட்டியார் மீது நம்பிக்கையில்லை தீர்மானம் கொண்டுவந்தது; கலைந்தது. இதைத் தவிர தோழர் ஈ. வே. ராவைப்பற்றியோ, அவாது தீர்மானத்தைப் பற்றியோ, சுயமரியாதைச் சங்கங்களின் தீர்மானங்களைப் பற்றியோ, யாதொரு முடிவும் செய்ததாகத் தெரியவில்லை. இங்ஙனம் ஜஸ்டிஸ் கக்ஷியார்களால் சில முறைகள் தோழர் நாயக்கர் அவர்களின் தீர்மானம் கவனிக்கப்படாமல் போகப்பட்டு விட்டது. ஆகவே இனிச் சுயமரியாதைக்காரர்கள் என் செய்யப் போகிறார்கள்?

### ஜஸ்டிஸ் கக்ஷியில் வகுப்புணர்ச்சி

பிராமணர்கட்கெதிராக, பிராமணரல்லாதாரை ஐக்கியப்படுத்தி முன்னேற்றும் ஒரு தனி வகுப்புவாத நோக்கத்தோடு ஆரம்பிக்கப்பட்ட ஜஸ்டிஸ் கக்ஷிக்குள் இன்று தெலுங்கர், தமிழர் என்ற அதிகப்படியான வோர் வகுப்புப் பேதம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. மூன்று தினங்கட்கு முன் கனம் முத்தையா செட்டியாரவர்கள் மீது கொண்டுவரப்பட்ட தீர்மானத்தைக் குறித்து அபிப்பிராயம் சொல்லப் புகுந்த ஒரு தமிழன் மேற்படி வகுப்பு பேத உணர்ச்சியே மேற்படி தீர்மானம் கொண்டு வரப்படுவதற்குக் காரணம் என்று பத்திரிகைகட்கு எழுதுகிறார். அதாவது தமிழர்கள் நிர்வாகப் பதவியில் இருக்கக் கூடாதென்ற எண்ணமே கனம் செட்டியார்மீது குற்றஞ்சாட்டப்பட்டதற்கு ஏதுவாயிருந்ததென்று சந்தேகிக்கிறார். இதுகாறும் தெலுங்கர்களே ஜஸ்டிஸ் கக்ஷியின் தலைவர்களாயிருந்திருக்கின்றார்கள் என்பதையும், கனம் முனுசாமி நாயுடுவின் பின் தலைமைப் பதவி தமிழராகிய கனம் பி. டி. ராஜன் அவர்கட்கு கிரமம் பற்றி வர வேண்டியதிருந்தும் அவ்வாறு வரா-



# பார்லிமெண்டில் இந்தியா

## சரத் போசுக்குச் சட்டசபை செல்ல முடியாது

## ஜவஹர்லாலுக்கு விடுதலை இல்லை

லண்டன் பார்லிமெண்டு சபையில் டிசம்பர் 10-ந் தேதி திரு. மார்க்கன் ஜோன்ஸ் கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக உப இந்தியா மந்திரி (திரு. பட்லர்) நாட்டில் உள்நாட்டுக் குழப்ப மேற்படாமல் சிறை வைக்கப்பட்டிருக்கும் பாபு சரத் சந்திரபோசை சட்ட சபைக்குச் செல்ல அனுமதிக்க முடியாதென்று பதில் கூறினார்.

### மன்னர்கள் நிராகரிப்பு

அப்பால் சர் வில்லியம் டேவிசன் "மன்னர் சபை அக்ராசனரிடமிருந்து வெள்ளைக் காகிதம் திருப்தியளிக்கவில்லையெனக் குறிப்பிட்டு வைசிராய்க்கு ஏப்ரல் மாதத்தில் அனுப்பப்பட்ட காகிதம் ஏன் இரகசியமாக வைக்கப்பட்டிருக்கிறது? அதன் பின்னர் நடைபெற்ற கடிதப் போக்குவரவால் மன்னர் சபை தனது அபிப்பிராயத்தை மாற்றியிருப்பதற்குரிய அறிகுறி இருக்கிறதா?" என்று கேட்டார். அதற்கு திரு. பட்லர் அக்கடிதத்தில் 'தனது பார்வை, அந்தரங்கம்' என குறிப்பிடப்பட்டிருந்ததென்றும், எவ்விதப் புதிய அபிப்பிராயத்தையும் அறிவிப்பது அதன் நோக்கமல்லவென்றும், கூட்டுக் கமிட்டி அறிக்கை மன்னர்களின் அபிப்பிராயத்திற்கு இணங்கியதாகவே இருக்கிறதென்றும் கூறினார்.

### பண்டிதருக்கு விடுதலை இல்லை.

பின்னர் அந்தக் காமன்ஸ் சபைக் கூட்டத்தில் "ஸ்ரீமதி கமலாநேரு நோய் வாய்ப்பட்டிருப்பதை முன்னிட்டு பண்டித ஜவஹர்லால் நேருவை விடுதலை செய்யவேண்டும்" என்று திரு. ஹேல்ஸ் வற்புறுத்தினார்.

அதற்கும் உப இந்தியா மந்திரியான திரு. பட்லர் சென்ற கோடைக் காலத்தில் பண்டிதர் மனைவியைப் பார்க்கச் சிறிது காலம் விடுதலை செய்யப்பட்டிருந்தாரென்றும், வைத்தியர்களின் ஆலோசனைப்படி தேவையானபோது ஸ்ரீமதி நேருவைப் பார்க்கும்பொருட்டு அவர் இருந்துவரும் ஆரோக்கிய ஸ்தலத்திற்கு அருகிலுள்ள ஒரு சிறைக்குப் பண்டித நேரு மாற்றப்பட்டிருக்கின்றாரென்றும் சொன்னார். அப்பால் அவ்வாறு செய்வது சலுகை காட்டுவதாகுமென்றும், அதற்கப்பால் யாதும் சர்க்காருக்குச் சொல்ல தாம் தயாரில்லையென்றும் கூறினார்.

### கூட்டுக்கமிட்டி அறிக்கை தீர்மானம்.

கேள்விகட்குப் பதில் கூறியானதும் சர் சாமுவேல் ஹோர் "இந்திய அரசியல் முறையைத் திருத்தியமைக்கக் கூட்டுக் கமிட்டியின் சிபார்சுகள் தக்க அடிப்படையாக இருக்கின்றனவென்று இச்சபை ஒப்புக்கொள்கிறது. அஃதுடன் பொதுவாக அக்கமிட்டியின் அறிக்கையை ஒட்டிய முறையில் ஒரு மசோதா தயாரிப்பது உசிதமென இச்சபை கருதுகிறது" என்ற தீர்மானத்தைப் பிரேரேபித்தார்.

### இந்தியாவைப்பற்றி மார்க்கன் ஜோன்ஸ்

மேற்படி சீர்திருத்தங்களைப் பற்றி லண்டன் காமன்ஸ் சபையில் 2-வது நாள் (11-ந் தேதி) விவாதத்தின் பொழுது திரு. மார்க்கன் ஜோன்ஸ் என்ற தொழிற்கட்சியங்கத்தினர் பின் வருமாறு பேசினார்:—

"விவாதத்தின் போக்கிலிருந்து சீர்திருத்தத்தை — அது எம்மாதிரியானதாக இருந்தாலும்—ஆதரிக்கிறார்கள் என்று தெரிகிறது. பிரிட்டன் இந்தியருக்கு ஒன்றும் செய்யவில்லை என்று கூறுவது முட்டாள்தனம் என்று யாவரும் ஒப்புக்கொள்ளுவார்கள். ஆனால் இதுவரை இருந்த மாதிரி இனி இருக்கமுடியாது என்று திட்டமாகத் தெரிகிறது. கூண்டுக்கிளி, நாம் கூண்டின் கம்பிகளுக்கு தங்கமுலாம் பூசுகிறோம் என்பதற்காக அதிக இனிமையாகப் பாடுவதில்லை. சுய ஆட்சிக்கு வேண்டப்படும் தகுதியை நாம் கொடுத்திருக்கிறோம் என்பதற்காக நமக்கு இந்தியமக்கள் நன்றியறிதலுடையவர்களாக இருக்கவேண்டும் என்று நாம் எதிர்பார்ப்பது தவறு.

பிறகு இந்திய சிவில் சர்வீஸ் இலாகாவைப்பற்றிக் கூறும்பொழுது, இந்தியர்கள் எப்பொழுதெல்லாம் அரசியல் அதிகாரப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்களோ அப்பொழுதெல்லாம், வெள்ளைக்காரர்கள் போல் அவ்வளவு திறமையாகச் செய்திருக்கிறார்கள் என்றும், இந்திய இலாகாக்களில் ஆயிரக்கணக்கான பிரிட்டிஷ்காரர்கள் தலைமைவகித்தாலும், இலாகாவைப் பூராவாக நடத்துபவர்கள் இந்தியர்கள் என்றும், ஒவ்வொரு வருஷமும் ஆயிரக்கணக்கான படிப்பாளிகளை, வெள்ளைக்காரர்களைப் போல் அவ்வளவு திறமை வாய்ந்த இந்தியர்களை சர்வகலாசாலைகள் அனுப்பிக் கொண்டிருக்கின்றனர் என்றும் கூறினார்.

---

**மாற்றானுக்கு இடங்கொடேல்!**

மல் மற்றொரு தெலுங்காகிய கனம் பொப்பிலி ராஜாவை அடைந்தது என்பதையும், தற்போது கனம் முத்தையா செட்டியாரவர்கள்மீது நம்பிக்கையில்லையென்ற தீர்மானத்தை ஒரு தெலுங்குக் கனவானே கொண்டுவந்திருக்கின்றாரென்பதையும் நினைக்கையில் மேற்படிச் சந்தேகம் வலியுறுத்தப் பெறுகின்றது. நம்மைப் பொறுத்தவரையில் ஜஸ்டிஸ் கக்ஷியைப்பற்றி அணுவேனும் கவலையில்லையானாலும், பிராமணர் காங்கிரசைக் கெடுக்கின்றார்களென்று கூறும் ஜஸ்டிஸ்காரர்கள் தெலுங்கர் தங்களைக் கெடுக்கின்றார்களென்று சொல்லுவதற்கு இடமாகவிருக்கின்றார்கள் என்று நினைக்கையில் ஏதோ சில சொல்லவேண்டி வருகிறது.

# காங்கிரஸ் காரியக் கமிட்டி

## பாட்னாவில் கூட்டம்

### பா. கூ. க அறிக்கையை நிராகரிக்கத் தீர்மானம்

டிசம்பர் 5-ந்தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கூட்டம் பாபு ராஜேந்திர பிரஸாதின் தலைமையின் கீழ் கூடியது. அன்று மத்தியானம் 1 மணியிலிருந்து 4 மணி நேரம் கூ. க. அறிக்கையைப் பற்றிக் காங்கிரஸ் அனுஷ்டிக்கவேண்டிய முறைகளைப்பற்றி விவாதம் நடந்தது. இரவு 8-30 மணிவரை காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு விவாதித்தனர்.

மறுநாள் காங்கிரஸ் காரியக் கமிட்டியும், பார்லிமெண்டரி போர்டும் ஏகோபித்து பின்வரும் தீர்மானத்தைச் செய்திருக்கிறார்கள்.

"பார்லிமெண்டு கமிட்டி அறிக்கை சிபார்சுகளை நிராகரித்துவிட வேண்டுமென்றே இக்கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. நிராகரித்துவிட்டால், சகிக்க முடியாத அவதிப்படாக இருக்கும் இந்த அரசியலின் கீழ்தான் கஷ்டப்பட வேண்டியிருக்குமென்பதை இக்கமிட்டி அறிந்த போதிலும், காங்கிரஸ் செய்திருக்கும் தீர்மானப்படி ஜனப் பிரதிநிதி சபைகூட்டி ஒரு அரசியலை இதற்குப் பதிலாக அளித்தாலொழிய, பார்லிமெண்டு அறிக்கையை நிராகரிப்பதென்று இக் கமிட்டி தீர்மானிக்கிறது.

சர்க்காரின் அரசியல் திட்டத்தை நிராகரித்து விடும்படி சட்டசபை காங்கிரஸ் அங்கத்தினர்களை இச் சபை கேட்டுக் கொள்ளுகிறது. தேசிய லட்சியமான பூரண சுயராஜ்யத்தைப் பெறும் வகையில் காங்கிரஸ் கைக்கொள்ளும் ஒவ்வொரு முறைக்கும் பரிபூரண ஆதரவளிக்கும்படி இக்கமிட்டி கேட்டுக் கொள்கிறது."

டிசம்பர் 6-ந் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டியும், பார்லிமெண்டு போர்டும் கலந்தாலோசித்து இத்தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது.

வெள்ளை யறிக்கையிலே குறிப்பிட்டுள்ள இந்திய எதிர்கால அரசியல் திட்டத்தை நிராகரிப்பதென்றும், பிரதிநிதித்துவ சபை தயாரிக்கும் அரசியல் திட்டமே திருப்தி அளிக்க முடியுமென்றும், காங்கிரஸ் ஏற்கனவே நன்கு ஆலோசித்துத் தீர்மானித்திருக்கிறது. வெள்ளை யறிக்கைத் திட்டத்தை நிராகரிப்பதையும், பிரதிநிதித்வ மகாசபை கூட்ட வேண்டும் என்பதையும், சமீபத்தில் நடந்த இந்தியா சட்டசபைத் தேர்தல் மூலம் ஒட்டுக்கொண்டு ஊர்ஜிதம் செய்துவிட்டது. வெள்ளை யறிக்கை சிபாரிசுகளைவிட கூட்டுப் பார்லிமெண்டரி கமிட்டி அறிக்கை பல அம்சங்களிலும் பிற்போக்கானதாக இருக்கிறதென்றும், இதை அங்கீகரிக்க முடியாதென்றும் கூறி கண்டித்திருக்கிறார்கள். அதிக பணச் செலவுடன் கூடிய ஒரு வேஷத்திலே இத்தேசத்தை அன்னியர்கள் சுரண்டுவதையும், ஆதிக்கம் பெறுவதையும், வலுப்படுத்தி ஸ்திரமாக்குவதற்காகவே கூட்டுப் பார்லிமெண்டரிக் கமிட்டித் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுதுள்ள அரசியல் அமைப்பை விட அதிக விஷமத்தனம் உள்ளதாகவும் ஆபத்தானதாகவும் இருக்குமாதலால், மேற்படி திட்டத்தை நிராகரித்து விட வேண்டுமென்றே இக் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. காங்கிரஸ் தீர்மானித்துள்ளபடி பிரதிநிதித்வ மகாசபையைக் கூட்டி ஓர் புதிய திட்டத்தைத் தயாரிக்கும் வரை, தற்போதுள்ள, இழிவானதும் சகிக்க முடியாததுமான அரசியலின் கீழ் உழன்று போராடி வர வேண்டியிருக்கும் என்று நன்கறிந்தே, இத்திட்டத்தை நிராகரிக்க வேண்டுமென இக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

சீர்திருத்தத்தின் பெயரால் இத்தேசத்திலே சர்க்கார் நிர்ப்பந்தமாகப் புகுத்த விருக்கும் இத் திட்டத்தை நிராகரிக்க வேண்டுமென இக்கமிட்டி, சட்ட சபை மெம்பர்களை கேட்டுக் கொள்ளுகிறது. தேசிய லட்சியமாகிய பூரண சுயராஜ்யத்தை பெற அவ்வப்போது செய்யும் தீர்மானத்தைத் தேசம் ஆதரித்து நிற்கவேண்டுமென்று இக் கமிட்டி கேட்டுக் கொள்ளுகிறது."

## இந்தியச் சட்டசபை ஆரம்ப நாளில்






# எல்லைப்புறக் காந்தி கைதி

## காங்கிரஸ் தலைவர் அறிக்கை ஸ்ரீ புலாபாய் வழக்காடுவார்

## ஜாமீனில் விடுதலை பெற மறுப்பு நடிவடிக்கைகளின் முழு விவரம்

எல்லைப்புறக் காந்தியாகிய அப்துல் கபர்கான் டிசம்பர் 7-ந் தேதி வார்தாவில் கைது செய்யப்பட்டார். கைது செய்கையில் மகாத்மா காந்தியும் அவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். போலீசார் புகுந்து உத்தரவைக் காண்பித்ததும், கபர்கான் விடைபெற்றுக்கொண்டார். காந்திஜீ எதிர்வழக்காடவேண்டுமென்று சொன்னதற்கு ஸ்ரீ. கான் தமக்கு வேண்டாமென்று தோற்றுவதாகப் பதில் கூறினர்.

### மாஜிஸ்திரேட்டின் முன் ஸ்ரீ. கான்

நாகபுரி எக்ஸ்பிரஸில் ஸ்ரீகான் 8-ந் தேதி பிற்பகல் 2-45 மணிக்கு ஒரு இரண்டாவது வகுப்பு வண்டியில் ஏற்றி பம்பாய்க்குக் கொண்டுவரப்பட்டார். அங்கு வந்ததும், விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனில் கபர்கான் வண்டியிலிருந்து இறங்கினர். ஏராளமான காங்கிரஸ்வாதிகளும் மற்றவர்களும் அவரை வரவேற்றனர். டிபுடி போலீஸ் கமிஷனரான கான்பகதூர் பெட்டிகாரா முதலிய போலீஸ் அதிகாரிகள் கபார்கானை ஒரு மோட்டாரில் ஏற்றி பிரதம மாகாண மாஜிஸ்திரேட்டின் கோர்ட்டுக்கு அழைத்துச் சென்றனர். போலீசார் பலமாகப் பந்தோபஸ்து செய்திருந்தார்கள்.

### கைதியானதற்குக் காரணம்.

கான் கபார்கான் சென்ற அக்டோபர் 27-ந் தேதி நாகபாதாவில் செந்தொண்டர் இயக்கம் பற்றி விடுத்த ஒரு பிரசங்கமே அவர் தற்பொழுது கைது செய்யப்பட்டிருப்பதற்குக் காரணமாகும்.

### ஜாமீனில் விடுதலை வேண்டாம்.

பின் கபார்கான் பிரதம மாகாண மாஜிஸ்திரேட்டான ஸர் எச். பி. டாஸ்டூர் முன் ஆஜர் செய்யப்பட்டார். திரு. கே. எம். முன்ஷி, கான் கபார்கானுக்காக ஆஜராகி, கான் கபார்கான் எங்கும் ஓடிப்போய்விட மாட்டாரென்றும் அவருடைய வார்த்தையை நம்பியே அவரை ஜாமீனில் விடுதலை செய்யலாமென்றும் தெரிவித்தார். அந்நிலையில் கான் கபார்கான் தாம் ஜாமீன்பேரில் விடுதலை பெற விரும்பவில்லை யெனக் கூறினர். அதன் மேல் திரு. முன்ஷியும், கபார்கானும் சிறிது நேரம் கலந்து பேசினர். பின்னர் திரு. முன்ஷி, ஒரு தவறு காரணமாகத் தாம் மேற் குறிப்பிட்டவாறு மனுச் செய்துகொண்டதாகவும், இப்பொழுது தாம் கபார்கானை ஜாமீனில் விடுமாறு மனுச் செய்துகொள்ள விரும்பவில்லையென்றும் தெரிவித்தார். பிறகு மாஜிஸ்திரேட் கபார்கானை சிறையில் வைக்க உத்திரவிட்டார்.

### திரு. ராஜகோபாலாச்சாரி அறிக்கை.

கான் கபார்கான் கைது செய்யப்பட்டது பற்றி திரு ஸி. ராஜகோபாலாச்சாரியைப் பேட்டி கண்ட பொழுது அவர் கூறியதாவது:—

"கான் அப்துல் கபார்கான் எதிர் வழக்காட வேண்டுமென காந்திஜி கூறியிருப்பாராயின், அதுபற்றி இப்பொழுது நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் சர்க்கார் அவரைக் கைதுசெய்து அவர் மீது இ. பி. கோ. 124 ஏ. பிரிவுப்படி வழக்குத் தொடர அனுமதித்ததன் மூலம், தாங்களும் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையையும், தேசீய விடுதலை உணர்ச்சியையும் வளர்த்து வருவதாகச் சொல்லி வருவதற்கு முரணான ஒரு வேலை முறையைக் கையாண்டு வருகின்றனர் எனச்சொல்ல யாருக்கும் உரிமையுண்டு."

### பாபு ராஜேந்திரர் அறிக்கை

எல்லைப்புற காந்தி கைது செய்யப்பட்டிருப்பது பற்றி காங்கிரஸ் தலைவரான பாபு ராஜேந்திரப் பிரசாத்தை அ. பிரஸ் நிருபர் பேட்டி கண்டபோது அவர் கூறியதாவது:—

"சமாதானம் இருந்து வருவதாகச் சொல்லப்படும் தற்பொழுதுள்ள நிலையிலும் நாம் எவ்வளவு திக்கற்றவர்களாக இருக்கிறோம் என்பதை இச்சம்பவம் நமக்கு கடுமையான முறையில் ஞாபகப்படுத்துகின்றது.

நாட்டினர், வேதனை விளைவிக்கக் கூடிய இத்தகைய நிகழ்ச்சிகளைக்கண்டு மன அமைதி இழக்காது தாங்கள் ஏற்கனவே வகுத்துள்ள நிர்மாண வேலைத் திட்டத்தை நடத்திவைப்பதில் ஈடுபட்டு வரவேண்டும்.

நமது போராட்டத்தில் சுதந்திரமும், ஹிந்து—முஸ்லீம் ஒற்றுமை, சத்தியம், அஹிம்சா தர்மம் இவைகளும் மலிமிக்க வேண்டுமென்பதே கான் கபார்கானின் கருத்து. அவர் கைது செய்யப்பட்டிருப்பது கண்டு அவைகளை எய்த நாம் அதிகமான உறுதியுடன் உழைக்கவேண்டும்.

### மகாத்மா கட்டளை.

காங்கிரஸ் காரியக்கமிட்டி, காங்கிரஸ் பார்லிமெண்டு போர்டு இவைகளின் கூட்டம் சம்பந்தமாக பாடலீபுரம் சென்றிருந்த சர்தார் வல்லபபாய் படேலும், ஸ்ரீ புலாபாய் தேசாயும் 10-ந் தேதி பம்பாய் வந்து சேர்ந்தனர். வழியில் வார்தாவில் இறங்கி மகாத்மாகாந்தியைக் கண்டு பேசினர்.

13-ந் தேதியன்று கான் அப்துல் கபூர்கான் வழக்கு விசாரணைக்கு வரும்போது, கூடுமானவரையில் எதிர் வழக்காடும்படி மகாத்மா காந்தி, ஸ்ரீ புலபாய் தேசாய்க்கு அறிவுறுத்தியுள்ளாரென்று தெரிகிறது.

# எல்லைப்புறம் செல்ல காந்திஜி ஆசை

—(●)—

## சர்க்கார் தடை செய்வதன் முடிவென்ன?

—(○)—

### பல தலைவர்களின் அபிப்பிராயம்

—:(●):—

மகாத்மா காந்தி எல்லைப்புறமாகாணத்துக்கு விஜயம் செய்ய விரும்புவது பற்றி சர்க்காருடன் பலமாகக் கடிதப் போக்குவரத்துச் செய்து வருகிறார். ஒருகால் சர்க்கார் அனுமதி கொடுக்க மறுக்குமாயின் காந்திஜீ தீவிரமான வழிகளைக் கையாடுவார் என்று 'சர்ச்லைட்' பத்திரிகை கூறுகிறது.

சிறை செல்லும்படியாகத் தாம் வற்புறுத்தப்படாமலிருக்கும்வரை இத்தருணத்தில் சட்டமறுப்பு இயக்கம் சம்பந்தமாக எந்த வேலைத் திட்டத்திலும் இறங்க அவர் விரும்பவில்லை.

தேசத்தில் சட்டமறுப்பு இயக்கம் நடைபெறாத காலத்திலும் நிர்மாணத் திட்டத்தின் பொருட்டுமே அவர் அதிக கவனம் செலுத்தும்பொழுதும் எல்லைப்புறத்துக்கு அவர் செல்வதைத் தடுக்க சர்க்கார் முயற்சி செய்வதால் சட்டமறுப்பு இயக்கத்தைக் காந்திஜீ கைக் கொள்ளும்படியாக வற்புறுத்தப் படலாம்.

காந்திஜி எவ்விதமாக முடிவுசெய்வாரென்பதை முன்னமே அறிந்துகொண்ட பிறகுதான் காபர்கானைக் கைது செய்ததாகத் தோற்றுகிறது. ஆகையால் சர்க்காரின் அனுமதி மறுப்பை எதிர்பார்க்காமலே காந்திஜீ சட்டமறுப்பு இயக்கத்தைத் துவக்கிச் சிறை செல்லவும் கூடும்.

சர்க்கார் சமரசப் போக்குடன் நடந்துகொண்டிருந்தால் நிலைமை வேறு மாதிரியாக இருந்திருக்குமென்று தெரியவருகிறது. காந்திஜிக்கு அனுமதியளிக்க மறுப்பதாலும் கான் சாகிபைக் கைது செய்ததாலும் சர்க்கார் மனப்பான்மை நன்கு தெரிவதால் ஒரு நெருக்கடியான நிலைமை ஏற்படுவதாக இருக்கிறது.

மற்றொரு பத்திரிகை காந்திஜீ கிராம புனருத்தாரண கமிட்டிகளிலோ மற்று எந்தக் கழகங்களிலுமோ அங்கம் வகிக்க மறுப்பதைப் பார்த்து அவர் எப்பொழுதாவது சட்டமறுப்புச் செய்து சிறை சென்று விடலாமென்று யூகிக்கின்றது.

#### காந்திஜி அறிக்கை

அஸோஸியேடட் பிரஸ் பிரதிநிதி கேட்டதின்பேரில் மகாத்மா காந்தி கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டார்:—

எல்லைப்புற மாகாணத்திற்கு நான் விஜயம்செய்ய ஆலோசனை செய்து கொண்டிருப்பது சம்மந்தமாக சர்க்காருக்கும் எனக்கும் நடைபெற்று வரும் கடிதப் போக்குப்பற்றி பத்திரிகை நிருபர்கள் ஆதாரமற்ற செய்திகளை வெளியிட்டு வருகின்றனர். அந்தக் குறிப்புகளை நம்பவேண்டாமென்று பொது ஜனங்களை நான் கேட்டுக்கொள்கிறேன். கூடிய விரைவில் நான் ஒரு அறிக்கையை வெளியிடுவேன்.



#### திரு. தேசாய் கருத்து

வார்தாவில் மகாத்மா காந்தியைக் கண்டு பேசிவிட்டு 10-ந்தேதி காலை பம்பாய்க்குத் திரும்பிவந்த திரு. புலாபாய் தேசாய் கூறியதாவது:—

"மகாத்மாஜீ சீக்கிரத்தில் எல்லைப்புறத்திற்குச் செல்லக் கூடுமென எண்ணச் சிறிதும் இடமில்லை. ஏனெனில் அவர் டில்லியில் 20-ந் தேதியன்று கூடவிருக்கும் ஹரிஜன மகாநாடு சம்பந்தமான வேலையில் ஈடுபட்டிருக்கின்றார். பின்னர் அவர் கிராமப் புனருத்தாரண வேலையைக் கவனிப்பார். அவருடைய எதிர்கால வேலைத் திட்டம் பற்றி, அவர் என்ன செய்ய உத்தேசிக்கிறாரென யாரும் கூறுவதற்கில்லை. காந்திஜீ எல்லைப்புறத்திற்குச் செல்லக் கூடாதென சர்க்கார் உத்தியோக முறையில் எத்தகைய தடை உத்திரவும் பிறப்பிக்கவில்லை. இவ் விஷயமாக சர்க்காருக்கும் காந்திஜீக்கும் கடிதப் போக்குவரத்து மட்டுமே நடந்திருக்கின்றது."

#### ஸ்ரீமதி சரோஜனி தேவி கருத்து

மிகுதியான வேலைகளைச் செய்யப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் இந்த சமயத்தில் மகாத்மா காந்தி சிறை செல்ல விரும்பவே மாட்டாரென ஸ்ரீமதி சரோஜனி தேவி தெரிவித்தார்.

இந்த அபிப்பிராயத்திற்கு நேர்மாறாக வேறு சிலர் கருதுகிறார்கள். மகாத்மா காந்தி சிறை செல்ல முடிவு செய்து விட்டாரென்றும் ஆனால் கிராம கைத்தொழில் புனருத்தாரணத் திட்டத்தை நடத்தி வைப்பதற்காக ஜனவரி மாதம் 15ந் தேதி வரை அவர் பொறுத்திருப்பாரென்று இவர்கள் கூறுகின்றனர்.

இதற்கிடையில், மகாத்மா காந்தி வைஸிராயுடன் கடிதப் போக்கு வரத்து நடத்தக் கூடும். தம்மைப் பின்பற்றுவோர் கிராமக் கைத்தொழில் புனருத்தாரண வேலைகளில் ஈடுபடவேண்டுமேயன்றி சிறை செல்லக் கூடாதென காந்திஜி விரும்புவார்.



# ஸ்ரீ பாரதியாரைப் பற்றி

## சில கதைகள்

ஸ்ரீ முத்துசாமி

ஒருகால் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியாரும் சில துணைவர்களும் திருநெல்வேலியிலிருந்து தாழையூற்றுக்குச் செல்கையில், நேரமாகி விட்டதால், ஒரு மரத்தடியில், அங்கவஸ்திரங்களை விரித்துப் படுத்துக்கொண்டார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் நன்கு பழக்கமுடையவர்கள், பாரதிக் கோஷ்டியார் படுத்திருந்த இடம் கயற்றாற்றுப் பக்கமென்று தெரிந்துகொள்ளலாம். அந்தப் பகுதிகளைப் பேய் வாழுமிடங்களென்றும், 'சுடலைமாடன்' என்ற துஷ்ட தெய்வம் விளையாடும் பகுதியென்றும் சொல்லப்படுவது இயல்பு. தாழையூற்றில் வசிப்பவர்கள் எந்தக் காரணத்தைக்கொண்டு பிரஸ்தாப இடத்திற்கு வருவதில்லை. இந்த விஷயம் பாரதியாருக்கு நன்கு தெரியும். என்றாலும் தைரியத்தை ஊன்றுகோலாகக் கொண்டவராகையால் சற்றும் அச்சங்கொள்ளவில்லை.

அவர்கள் படுத்துக்கொண்டபோது மணி சுமார் 11 இருக்கும். அன்று நிலா வெளிச்சத்தின் தோற்றமில்லாததால், இருளே நிறைந்திருந்தது. சுற்றிலும் பொட்டலும், ஆங்காங்கு சாலைகளும், வயல்களும் மிகப்பயங்கரமாய்த் தோற்றின. ஒன்றிரண்டு இடங்களில் துஷ்டதேவதை ஆலயங்களில் வெளிச்சம் காணப்பட்டதைத் தவிர வேறு வெளிச்சமேயில்லை. ஆந்தைகள் கூட காண்பதற்கில்லை அன்று.

இப்படிப்பட்ட இருளில் பாரதியாருட்பட நால்வர் படுத்துக்கொண்டதும்—சிறிது நேரத்தில் மூவர் ஆழ்ந்த துயிலில் மூழ்கினர்; பாரதியார் மட்டிலும் விழித்துக்கொண்டு,

(கிளிப்பாட்டு)



1. திருவைப் பணிந்து நித்தம்
செம்மைத் தொழில் புரிந்து
வருவ வருவ தென்றே—கிளியே
மகிழ் வுற்றிருப்போ மடி.

2. வெற்றி செயலுக் குண்டு
விதியி னியம மென்று
கற்றுத் தெளிந்த பின்னும்—கிளியே
கவலைப் பட லாகு மோ?

3. துன்ப நினைவு களும்
சோர்வும் பயமு மெல்லாம்
அன்பி லழியு மடீ—கிளியே
அன்புக் கழிவில்லை காண்.

4. ஞாயிற்றை யெண்ணி யென்றும்
நடுமை நிலை பயின்று
ஆயிர மாண் டுலகில்—கிளியே
அழி வின்றி வாழ்வோ மடீ.

5. தூய பெருங் கனலைச்
சுப்பிர மண்ணி யனை
நேயத்துடன் பணிந்தால்—கிளியே
நெருங்கித் துயர் வருமோ?

என்ற பாடலைப் புலம்பிக்கொண்டே இருந்தார்.

சுமார் மணி 12-30 இருக்கலாம். அப்போது தென்திசையில் — அங்குதான் பேய்க் கோவிலிருக்கிறது—ஒரு குரலோசை எழுந்தது. குரலோசையென்றால் மெதுவானதல்ல. கொலை செய்யப்படும் ஒரு பெண் கதறுவது போல தீனக்குரல் சத்தம் எழுந்தது. உடன் தூங்கியவர்கள் விழித்துவிட்டார்கள். பாரதியார் அந்த விடத்திற்குப் பாய்ந்து செல்லப் புறப்பட்டார். உடனிருந்தவர்களில் ஒருவர் "வேண்டாம் ஐயா. போகவேண்டாம். இப்படி இந்தப் பகுதிகளில் சத்தம் கேட்பது இயல்புதான். இது துஷ்ட தெய்வங்களின் சூது. அங்குசென்று பார்த்தீர்களானால் யாதொரு பெண்ணையும் காணமுடியாது" என்று தடைசெய்தார். "சக்திவேலன் அடிமைகளாகிய நம்மைப் பேய் என்ன செய்யும்" என்று கூறிக்கொண்டு புறப்பட்டார். புறப்பட்ட அவரைத் தனியாகவிட மனமுமில்லை. மற்றவர்கட்குத் தனியாகச் சாலையில் இருக்கவும் பயம்…………

எனவே எல்லோருமாக கரிய இருளில் சத்தம் வந்த திசையை நோக்கி நடந்தார்கள். ஆனால் பாரதியார் மட்டிலும் ஓடினார் என்று தெரிதல்வேண்டும்.

ஓடியபோது வழியில் ஒரு பெரிய தேரி (குன்று) இருந்தது. அதன் மறுபுறம்தான் கயற்றாறு. ஆற்றைக் கடந்தால் ஒரு கோவில்; அக்கோவிலின் பக்கம்தான் பெண்குரல் எழுந்த இடம்.

பாரதியார் தாவித்தாவிக் குன்றண்டை வந்ததும், ஒரு நண்பர் "ஐயா மலை, மெதுவாகப் போங்கள்" என்றார். அதற்குப் பாரதியார்

"நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண் ஒருத்தி பணி
[யிலே"

என்றார், உடன் நண்பர் "நுண்ணிடைப் பெண்ணா? அங்கபோய்ப் பாருங்கள் என்னவென்று தெரியும்" என்றார்.

நால்வருமாகச் சில நிமிஷங்களில் அங்கு போயினர். அங்கு அந்தோ! இரு பிச்சைக்காரர்கள் (தம்பதிகள்)

## சர்க்காரின் அடக்குமுறை?

சென்னை காங்கிரஸ் மண்டபத்தில் திரு. டி. பிரகாசம் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் டிஸம்பர் 9-ந்தேதி கூடியது. அதன்நோக்கம் சர்க்கார் திரு. சுபாஷ் சந்திரபோஸ் மீது விதித்துள்ள தடைகளைக் கண்டிக்கவும், டாக்டர் சத்தியபால், டாக்டர் அப்துல் காபர்கான் முதலிய தலைவர்களை திடீரென்று கைது செய்த அடக்குமுறையைக் கண்டிப்பதேயாகும் சர்க்கார் சொல்லிவரும் இக்காலத்திலேஇச்சமயத்திலேயே அடக்குமுறைகளைக் கையாளுவது வருந்தத்தக்க விஷயமென்றும் 13 வருஷங்களாக இந்த நாட்டில் தேசியக்கிளர்ச்சி புதிய முறையில் ஆரம்பிக்கப் பட்டதின் பயனாக உணர்ச்சியதிகமாக அதிகரித்து வருவதனால், ஜனங்கள் விரும்பாத ஒரு சீர்திருத்தத்தை சர்க்கார் அவர்கள் மீது சுமத்த முடியாதென்றும்; சர்க்கார் இனினும் அடக்கு முறையைக் கையாண்டால் பார்லிமெண்டரி முறைப்போராட்டத்தை நிறுத்தி தீவிரமான முறையைக் கையாள வேண்டி வரும் என்றும் இந்த நிலைமைக்குச் சர்க்காரே காரணமாவார்கள் என்றும் கூட்டத்தில் தலைமை வகித்த திரு. டி. பிரகாசம் பேசினார். அதன் பிறகு பலர் பேசவும் கூட்டம் முடிவடைந்தது.

---

கோவில்பட்டி — சாமியின்முன் படுத்திருந்தார்கள். மூக்குமுட்டக் கட் குடித்திருந்தால் புருஷன் மூர்ச்சையாகிக் கிடக்க, பெண் (ஒரு கிழவி குடி வெறியால்) கத்திக்கொண்டிருந்தாள். பாரதியார் அருகில் சென்று "ஏன் கூச்சல் போடுகிறாய்?" என்றதற்கு அக்கிழவி "பாட்டுப் பாடுகிறேன்; கூச்சல் என்கிறீர்களே சாமி?" என்றாள். நண்பர்கள் குலுங்கக் குலுங்கச் சிரித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள்.

மறுநாள் திருநெல்வேலி சென்றதும் இதை நண்பர்களிடம் 'நண்ணிடைப் பெண் ஒருத்திக்குப் பணிசெய்த கதை'யைச் சொல்லிச் சிரித்தார்களாம். (ஸ்ரீ பாரதியாரைப்பற்றி திரு. முத்துசாமி எழுதிய நான்கு கதைகளைப் போனவார ஊழியனில் காணலாம்.)

இக்கதை நான் கேள்விப்பட்டதேயன்றி உண்மை தெரியாது.

## திருச்சி ஜில்லா
### தேசீய வாலிபர் சங்க 2-வது ஆண்டுவிழா

திருச்சி ஜில்லா தேசிய வாலிபர் சங்கத்தின் 2-வது ஆண்டுவிழா டிசம்பர் 25-ந் தேதி செவ்வாய்க்கிழமை நடைபெறும். சென்னை வாலிபர் சங்கத்தின் உபதலைவரான ஸ்ரீமதி ருக்மணிலக்ஷ்மிபதி தலைமை வகிப்பார். திரு. எ. ஆர். வி. ஆச்சார் தேசியக்கொடி ஏற்றுவார். தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி திரு. சி. பி. சுப்பையா முதலியார், சென்னை ஸ்ரீபாத சங்கர் முதலியவர்கள் தேசிய இயக்கமும் வாலிபர் கடமையும் என்பது பற்றிப் பேசுவார்கள் என்று தெரிகிறது.

## ஹரிஜன மஹாநாடு
### 1935 ஜனவரிக்கு ஒத்திவைக்கப் பட்டது.

தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்கக் காரியதரிசி பின்வருமாறு எழுதுகிறார்:—

"திருநெல்வேலியில் 22-ந்தேதி நடக்கவிருக்கும் ஜில்லா மகாநாட்டினுலும், 23, 24-தேதிகளில் விருதுநகரில் நடக்கவிருக்கும் மாகாண காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தை உத்தேசித்தும் தமிழ்நாடு ஹரிஜன மஹாநாடு 1935 ஜனவரிக்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது. தேதி பின்னர் அறிவிக்கப்படும். எனினும் வருடாந்தரக்கூட்டம் 21-ந்தேதி திருச்சியில் டாக்டர் ராஜன் வீட்டில் நடைபெறும்."

---

## நோபல் சமாதானப் பரிசு
### திரு. ஹெண்டர்ஸனுக்கு அளிக்கப்பட்டது

1933-ம் ஆண்டுக்கான நோபல் சமாதானப் பரிசு திரு. நார்மன் ஏஞ்சலுக்கும் 1934-ம் ஆண்டுக்கான பரிசு திரு. ஆர்தர் ஹெண்டர்ஸனுக்கும் அளிக்கப் பட்டிருக்கின்றன. இப்பரிசுத் தொகை 7000 பவுனாகும். 1933-ம் ஆண்டுக்கான 2000 பவுன் பெறுமானமுள்ள கார்னிஜி சமாதானப் பரிசும் திரு. ஆர்தர் ஹெண்டர்ஸனுக்கே அளிக்கப்பட்டது.

## பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கத் தந்தி
### விசேஷ உரிமை பாதுகாப்பு கோரிக்கை

பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்தாரால், கூட்டுப் பார்லிமெண்டரி கமிட்டி அறிக்கையின் சிபார்சுகளைப் பலமாகக் கண்டித்து, பிரதம மந்திரிக்கும், இந்தியா மந்திரிக்கும், நீண்டதோர் தந்தியனுப்பப்பட்டிருக்கிறது. 473-வது பாராவில், செட்டியார் பாங்கர்களென வெளிப்படையாகப் பொருள்படும்படி இந்திய லேவாதேவிக்காரர்களை யொட்டி அவமதிப்புடன் குறிப்பிட்டிருப்பதை அத்தந்தி பலமாக ஆட்சேபிக்கிறது. பர்மாவின் பொருளாதார நிலைமையில் செட்டியார் பாங்கர்கள் வகித்துவந்த பாகம், இதற்கு முன்னுள்ள கவர்னர்கள், உயர்தர அதிகாரிகள், பாங்கிங் விசாரணை கமிட்டி ஆகியோரால் உணர்ந்து கொள்ளப்பட்டிருப்பதாக அது குறிப்பிடுகிறது.

குடியேற்றம், சொத்து உரிமை, சாதாரணமாகத் தொழிலை நடத்துவது ஆகியவற்றின் சம்பந்தமாக செட்டியார்களின் உயிர்நிலையான உரிமைகள் பாதிக்கப்படாத முறையில் மசோதா தயாரிக்கப்பட வேண்டுமெனவும், இரண்டாவது சட்டசபையில் ஒரு அங்கத்தினர் உள்ள ஒரு விசேஷ சமூகமாகத் தங்களைப் பாகுபாடு செய்யவேண்டுமெனவும் அத்தந்தி கோருகிறது.

இதேபோன்ற தந்திகள், வைஸிராய், பர்மா கவர்னர், இந்திய வர்த்தகர் சங்க ஐக்கிய சங்கம் ஆகியோருக்கும் அனுப்பப்பட்டுள்ளன.

---

## தஞ்சை ஜில்லா போர்டு
### இரண்டாய்ப் பிரிக்கப்பட்டது

தஞ்சை ஜில்லா போர்டை இரண்டாய்ப் பிரிக்க கனம் பொப்பிலி இராஜா உத்திரவு பிறப்பித்து விட்டதாய் அறிகிறோம். மற்றும் தம் கட்சியைச் சார்ந்த ஒருவர் ஜில்லா போர்டு தலைவராய் வருதற்பொருட்டு நான்கு நியமனங்கள் செய்யப்போவதாய்ச் சொல்லப்படுகிறது.



# கடைசி முத்தம்

(பவானிதாசன் எழுதியது)

"செல்லம்! செல்லம்!" என்று கூவிக்கொண்டு ஓடி வந்தான் ராஜா.

"என்னடா கண்ணு!" என்று கேட்டுக்கொண்டு எதிரே வந்தாள் செல்லம்.

"அப்பா காகிதம் போட்டிருக்கா, அம்மா! இதோ பார்" என்று கையிலிருந்த காகிதத்தை நீட்டினான் குழந்தை ராஜா.

காகிதத்தை வாங்கிய செல்லம் அதைக் கண்ணில் ஒத்திக்கொண்டு பிரித்துப் படித்தாள்.

அதில், கோபாலனுக்கு வேலை கிடைத்துவிட்டதாகவும், கூடிய சீக்கிரம் அவ்வூருக்கு மாற்றிக்கொண்டு வந்துவிடுவதாகவும் எழுதியிருந்தது.

இதைப் படித்தவுடன் செல்லத்திற்குப் பல ஞாபகங்கள் உண்டாயின. தனது நாதனின் பிரதிபிம்பமான ராஜாவைத் தன் பக்கத்திலிழுத்துப் பல முத்தங்களிட்டாள். அவனுடைய இதழில் முத்தமிடும்போது அவளுக்குண்டான ஆனந்தத்தை எழுத்தில் எழுத முடியாது. அவ்வளவு ஆனந்தம்!

அந்த முத்தம்! ஆம்! கோபாலன் வேலைக்குப் போவதற்காகப் புறப்பட்ட தினத்தில் செல்லத்தைக் கட்டியணைத்துக் கொடுத்த முத்தத்தைக் காட்டிலும், ராஜாவுக்குச் செல்லம் கொடுத்த முத்தம் அவ்வளவு பெரிதல்ல.

* * *

லாகூருக்கடுத்துள்ள ஓர் கிராமத்தில், கோபாலனுக்கு வேலை கிடைத்தது. அதுவும் தபாலாபீஸில் குமாஸ்தா! அவனுக்கு அவ்வூர் புதிதாகையால் தான் குடியிருப்பதற்காக ஓர் அறை வாங்கிக் கொண்டான்.

அந்த வீட்டில், ஓர் கிழவியும், அவளது பேத்தியும்தான் வசித்து வந்தனர். அவ்வூரிலுள்ள பெண்களில் அந்தப் பெண்தான் சிறந்த அழகுள்ளவள். ஆனால், அவர்கள் கோஷா முறையை அனுஷ்டித்ததால் அவளை நேரில் யாரும் பார்ப்பது மிகவும் கஷ்டம்.

கோபாலன் அந்த வீட்டின் அறையில் குடியிருந்தானே தவிர, அந்த வீட்டில் யார் இருக்கிறார்கள் என்ற விவரமெல்லாம் அறிந்து கொள்ளவில்லை.

ராதாபாய் மட்டும் (அந்தப் பெண்ணின் பெயர்) தனது கூரிய கண்களால் கோபாலனைப் பார்த்திருக்கிறாள். கோபாலன் அவ்வளவு அழகில்லையாயினும், முகவசீகரம் உள்ளவன். அவனுடைய அடர்ந்த குடுமியும், மயிர் அடர்ந்த புருவமும், அகன்ற மார்பும், பிறரை மயக்கும் சக்தி கொண்டவைகளாய் இருந்தன.

அந்த வசீகரச் சுழலில் ராதாபாய் வீழ்ந்து விட்டாள். இதெல்லாம் கோபாலனுக்குத் தெரியாது. அந்தக் கிழவியில்லா நேரங்களில் 'கோஷா' முறையை அனுஷ்டிக்காமல் தன்முன் தோன்றி காக்ஷி யளித்த ராதாபாயைத் தனது சகோதரிபோல் எண்ணி மனதில் விகற்பமில்லா திருந்தான்.

இப்படி மூன்று மாதங்களாய் விட்டன. ஒரு நாள் கிழவி பக்கத்திலிருந்த கிராமத்திற்குப் போயிருந்தாள். அன்றைய இரவு கோபாலன் தனதறையில் படித்துக்கொண்டிருந்தவன் அப்படியே தூங்கிப் போய் விட்டான். எப்போதும் போல் அவனது அறைக் கதவு திறந்திருந்தது.

கோபாலனின் வாயின் மேல் ஏதோ பூச்சி ஒன்று உட்காருவது போல் தோன்றி கண்ணை திறவாமலே, கையால் உதட்டைத் தட்டினான்.

அதற்குள் 'சூ' என்ற சப்தம் கேட்டது. அடுத்த விநாடியில் 'பள்ார்' என்ற சப்தம் கேட்டது. திடுக்கிட்டெழுந்தான். கோபாலன் அவன் பக்கத்தில் ராதாபாய் நின்று கொண்டு இடது கையால் கன்னத்தைத் தடவிக் கொண்டிருந்தாள்.

கோபாலனுக்கு விஷயம் விளங்கிற்று. பேசத் தோன்றவில்லை சிறிது நேரம் சென்றதும், "ராதா! இத்தனை நாள் வரை உன்னை எனது தங்கையைப் போல் நினைத்திருந்தேன். இல்லாவிடில் இந்த வீட்டில் இத்தனை நாள் இருந்திருக்கவே மாட்டேன். தவிர எனக்கு விவாகம் ஆய்விட்டது. நீ செய்த இந்தக் காரியம் என் மனைவிக்குத் தெரிந்தால் அவள் மனம் என்ன பாடுபடும்? நன்றாய் யோசித்துப்பார். உனக்குக் கல்யாணமாகி, உன்னுடைய கணவனை மற்றொரு பெண் இவ்விதம் முத்தமிடுவதைக் கண்டால் உன் மனம் எப்படித் துடிக்கும்? உன் கணவனுக்குத்தான் எப்படியிருக்கும்? போனால் போகட்டும். இத்தடவை நீ தெரியாமல் செய்ததை மன்னித்து விடுகிறேன். இனிமேல் அப்படி செய்யாதேயம்மா!" என்று கூறினான் கோபாலன்.

ராதாபாய் ஒன்றும் பேசவில்லை. கன்னத்தைத் தடவிக்கொண்டே வெளியே போய்விட்டாள். அவளுக்கு ஆனந்தமளித்த ஒரு முத்தம், அவனுக்கு மிகவும் வெறுப்பை யளித்தது.

மறுநாள் காலையில் பாட்டி வந்ததும் சொல்லிக் கொண்டு அந்த வீட்டைக் காலி செய்து விட்டுப் போனது, அவளுக்கு ஆச்சர்யமாயிருந்தது. தன்னை "அம்மா"வென்று அழைத்துக்கொண்டு தனது குடும்பத்தில் பிறந்தவனைப் போல் பழகின கோபாலன் வீட்டைக் காலி செய்தது பாட்டிக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது.

இது நடந்து இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. கோபாலனுக்கு அதுவரை 'லீவ்' கிடைக்கவில்லை. அவன் அனுபவம் பெறுவதற்காக, பல ஊர்களுக்கும் மாற்றப்பட்டான். அப்பொழுது, அவன் அடைந்த கஷ்டங்களுக்குக் கணக்குக் கிடையாது. என்றாலுங்கூட தனது ஊருக்கு—தனது செல்லத்திற்கு—கடிதம் எழுதுவது தவறுவதில்லை.

அவனை ஒவ்வொரு ஜில்லாவிலும் மாற்றி அனுபவம் பெறச்செய்ய வேண்டுமென்று தபால் அதிகாரிகள் கருதினர். தவிர, அவன் வேலையில் சுறுசுறுப்பும், சுத்தமும் உள்ளவனாய் இருந்ததால் சம்பளம் உயர்த்தும்படி மேலதிகாரிக்குச் சிபார்சு செய்தனர் பல தபால் உத்தியோகஸ்தர்கள். ஒருநாள், அவனுக்கு உத்தியோக முறையில் ஓர் கடிதம் வந்தது. பிரித்துப் பார்த்தான். தன்னை மதுரைக்குப் பக்கத்திலுள்ள ஊருக்குப் 'போஸ்ட்மாஸ்டரா'க நியமித்திருப்பதாகவும், உடனே புறப்பட்டுப் போகவேண்டுமென்று எழுதியிருந்தது.

தான் ஊருக்கு வருவதாக ஓர் கடிதம் எழுதிப்போட்டுவிட்டு, அவன் பிரயாணமானன்.

* * *

ஊரிலெல்லாம் காலரா. அது ராஜாவுக்கும் கண்டது. ஆனல் ராஜாவுக்கு குணமாய்விட்டது. செல்லத்திற்குக் கண்டு குணமாகவில்லை. அவள் படுத்த படுக்கையாகி விட்டாள். அவளுக்கு உதவிசெய்ய பெற்றோர்களும் இல்லை. தான் கஷ்டப்படுவதைப்பற்றிச் செல்லத்திற்குக் கவலையில்லை. ராஜாவைப் பார்த்துக்கொள்ளவேண்டுமே, மறுபடியும் அவனுக்குக் காலரா கண்டால் என்ன செய்வது ?—இந்தக் கவலைதான் ஜாஸ்தி.

இந்த நிலைமையில் அவளை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனர்கள் சுகாதார உத்தியோகஸ்தர்கள். அதற்கு மறுநாள் அவளுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் கோபாலன் சீக்கிரம் வருவதாகவும், குழந்தையைப் பத்திரமாய் பார்த்துக் கொள்ளவேண்டுமென்றும் எழுதியிருந்தது.

தன் நாதன் வரப்போவதைப் பற்றிச் சந்தோஷப்பட்டாள் செல்லம். அது நீடித்து நிற்கவில்லை. அவர் எதிர்பார்த்த வெகுமானத்தைக் கொடுக்கக்கூடிய அளவு சக்தியில்லாமல் நோயாளியாய் இருப்பது அவளுக்கு வருத்தத்தை யளித்தது.

இதே கவலையினல் அவள் இருதயம் பலவீனம் அடைந்தது. ஜன்னியும் கண்டுவிட்டது. அவள் பலப்பல பிதற்றினள். ராஜாவை தன் பக்கத்தில் கூப்பிடுவாள்; கட்டி யணைப்பதற்காகக் கை யைத்தூக்குவாள்; கைதூக்க முடியாமல் கீழே விழுந்துவிடும்—இந்த நிலைமையில் திடீரென ஜன்னி நின்றது; முகத்தில் தெளிவுதென்பட்டது. ஆனல் பிதற்றல் நிற்கவில்லை. "அவர் வருவாரா? எப்போ வருவார்? அன்றைக்கு—இதுதான் எப்பொழுதும்.

இப்படி ஒரு பொழுது கழிந்தது. காலை, எட்டுமணி யிருக்கும். இளந்தென்றல் குளிர்ச்சியாக வீசிக்கொண்டிருந்தது

செல்லம் மயக்கம் தெளிந்த நிலைமையில் ராஜாவைக் கூப்பிட்டாள். ராஜா வருமுன் மயக்கமடைந்தாள்.

மறுபடியும் மயக்கம் தெளிந்து, "அவர் வந்துவிட்டாரா?" என்று ஈனஸ்வரத்தில் கேட்டாள். அதே சமயம் கையில் ராஜாவைத் தூக்கிக் கொண்டு வந்த கோபாலன், "செல்லம்! வந்துவிட்டேன். இத்தனை நாளாய் பிரிந்திருந்த பாவி வந்துவிட்டேன்," என்றான் பரிதாபமான குரலில். செல்லம் கண்ணைத் திறந்தாள். அவளுடைய இதழ்கள் விரிந்தன. உடனே, அவளை அணைத்து முத்தமிட்டான் கோபாலன். அதுதான் கடைசி முத்தம் என்பதை அவன் அறிவானா! அந்த ஒரு முத்தத்தால், செல்லத்தின் ஆத்மா சாந்தியடைந்தது.

## சுங்குரும்பை

### பிச. சுப. வுக்கு உபசார விருந்து

28–11–34 திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் தாய்நாடு செல்வதை யொட்டி இங்கு தனவைசியர் அனைவரும் சேர்ந்து ஒரு சிற்றுண்டி விருந்து நடத்தினர்கள். மாலை 5மணிக்கு ஸ்ரீமான் கும. ராம. அவர்கள் வீட்டில் சிற்றுண்டி வழங்கப்பெற்றது. உள்ளூரில் பல பேர்களும் வெளியூர்களிலிருந்து அநேகரும் விஜயம் செய்திருந்தார்கள். ஸ்ரீமான்களான பினங்கு க. வெ. ராம. அழகப்ப செட்டியார், மு. நா. மு. மெய்யப்ப செட்டியார், கோலப்பிரை சு. மு. ராம. முத்துராமன் செட்டியார், கண. சுப. தெய்வராயன் செட்டியார், மு. பழ. பழநியப்ப செட்டியார், கூலிம் ராம. வ. சித. சிதம்பரம் செட்டியார், வெ. மு. வெ. ஷண்முகம் செட்டியார், பாரப்பந்தா நெ. அ. சு. பழ. காசிச் செட்டியார், கோலாலம்பூர் க. வெ. வெங்கிடாஜலம் செட்டியார், போர்ட் டிக்ஷன் மு. கா. காசி விஸ்வநாதன் செட்டியார், மு. அ. அண்ணாமலை செட்டியார், மைடான் வீ. மு. அ. முத்துராமன் செட்டியார், சுங்கைப் பாக்காப் டாக்டர் மூர்த்தி அவர்கள், சுங்குரும்பை டாக்டர் சரவணமுத்து அவர்கள்,—இன்டர்பிரட்டர் கோவிந்தசாமி அவர்கள், லாயர் P. சோமசுந்தரம் அவர்கள் முதலிய இன்னும் அநேகர் வந்திருந்தார்கள். ஸ்ரீமான் வெ. ராம. அழ. அழகப்ப செட்டியார் அவர்கள் எழுந்து, கூலிம் ஸ்ரீமான் ராம. வ. சித. சிதம்பரஞ் செட்டியார் அவர்களைக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அதுபோல் தலைமை ஏற்று விருந்தினரைப்பற்றி சில முகமனுரை வழங்கினர்கள். பிறகு ஸ்ரீமான் மு. கா. காசி விஸ்வநாதன் செட்டியார் அவர்களும் லாயர் ஸ்ரீமான் சோமசுந்தரம் அவர்களும் நண்பரைப் பாராட்டிப் பேசினர்கள். பின்னர் ஸ்ரீமான் கும. ராம. இராமநாதன் செட்டியார் அவர்கள் ஸ்ரீமான் பிச்சப்பாவுக்கு ஓர் மலர்மாலை அணிவித்தார்கள். ஸ்ரீமான் பிச்சப்பா அவர்கள் எழுந்து அன்பர்கள் பலர் உபசாரம் செய்ததைப் பாராட்டி நன்றி செலுத்துவதாகவும் திடீரெனத் தான் புறப்படுகிறதாக நினைத்திருக்கவில்லை என்றும், உடல்நலம் குன்றி இருப்பதால் 4 மாசம் லீவில் தாய்நாடு சென்று திரும்பவும் இங்கு வருவதாகவும், ஒன்றி வாழ்ந்த நண்பர்களைப் பிரிதல் நிரம்ப விசனமாகவே இருக்கிறதென்றும் எந்தக் காரியத்திலும் இந்த ஊரார் தன்னுடன் நிரம்ப ஒத்துழைத்திருக்கிறார்களென்றும், சுங்குரும்பை சிறிய ஊராக இருந்தாலும் சிறப்பில் ஓர் பெரிய ஊராகவே விளங்குகிறதென்றும், நாம் பிரிந்தாலும் நம் அன்பு பிரியும் தன்மையதல்ல வென்றும், புறப்பட நண்பர்களிடம் விடை பெற்றுக் கொள்ளுகிறேனென்றும் சொல்லி ஆசனத்தமர்ந்தார்கள். பிறகு தேசிய விடுதலை கீதத்தைச் சிரஞ்சீவி—பழ. சேது பாடியதும் மங்களகாமாக கூட்டம் இனிது நிறைவெய்தியது என திரு. லெ. சித. லெ. பழநியப்ப செட்டியார் எழுதுகிறார்.







# கொலைக்காரன் கை ("நந்தன்")

அப்பொழுது நாங்கள் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தோம். அந்தக் காலமே குஷி; கேள்வி கேட்பார் கிடையாது.

ஒருநாள் சாயங்காலம் எங்கள் ரூமில் நாங்கள் உட்கார்ந்து பேசிச் சிரித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது எங்கள் நண்பன் பரமேச்வரன், "எங்கிருந்து வருகிறேன் என்று தெரியுமா?" என்று சத்தம் போட்டுக்கொண்டு உள்ளே நுழைந்தான்.

"எங்கிருந்து வருகிறாய் என்று சொல்ல வேண்டுமாக்கும் ?" என்று நாங்கள் அவனைப் பார்த்துச் சிரித்தோம்.

"போங்கடா முட்டாள்கள். ஊரிலிருந்து அதிசயம் ஒன்று கொண்டு வந்தால், முட்டாள்தனமாக என்னத்தையும் நினைத்துக் கொள்ளுகிறதா ?" என்றான்.

"அதிசயத்தைச் சொல்லுமையா கேட்போம்" என்றோம்.

பரமேஸ்வரன் வைத்திய கலாசாலை மாணவன். சத்திர வைத்தியத்தில் அபாரப் பிரேமை. கையில் ஏதோ ஒன்றைக் காகிதத்தில் சுருட்டி வைத்திருந்தான்.

"இதுதான் அதிசயம்" என்று அதைப் பிரித்துக் காண்பித்தான்.

அது ஒரு பிணத்தின் வெட்டுண்ட கை!

வெகு நாள்பட்டது. தோல்கள் சுருங்கி, நகங்களுடன் பார்ப்பதற்கு பயங்கரமாக இருந்தது.

"சீச்சீ! தூக்கி எறி," என்று நாங்கள் கூவினோம்.

"இதன் கதை ரொம்ப சுவாரஸ்யமானது. கேளுங்கள்" என்று சாவதானமாக ஆரம்பித்தான்.

"நான் எங்களூருக்குப் போயிருந்தேன். அங்கே எங்கள் தெருவிற்கு மூன்றாவது தெருவில் ஒரு மந்திரவாதச் சாமியார் இருந்தார். அவர் இப்பொழுது தான் இறந்து போனர். தனி ஆசாமி. அனாதை. பிரேத சமஸ்கா்ரம் செய்ய அங்கிருந்ததை எல்லாம் ஏலம் போட்டார்கள். அப்பொழுது நான் இதை வாங்கினேன். இந்தக்கை இருக்கிறதே, அதன் கதை வெகு ஆச்சரியமானது. இந்தக் கையுள்ள மனுஷன் ஒரு வெள்ளைக்காரன். கையைப் பார்த்தால் அப்படித் தெரியாது. அதில் எண்ணெயும் தூசியும் படிந்து நிறம்மாறி இருக்கிறது. அவன் நூறு வருஷத்திற்கு முன்பு இங்கே வந்தவனும். பொல்லாத படுபாவி. அவன் செய்யாத அக்கிரமம் கிடையாது. எத்தனை கொலைகள்! இங்கு வரும்பொழுது பட்டாளத்து ஸோல்ஜராக வந்தான். அதை விட்டுவிட்டு ஒரு ஜமீந்தாரின் கையாளாக இருந்தான். கையாள், என்றால் என்ன, ஆள்களை உயர அனுப்பும் வேலைதான். சீமையிலேயே அவன் செய்த அக்கிரமங்கள் கொஞ்சமல்ல. கலியாணமான மறுநாள் தன் மனைவியைக் கிணற்றிற்குள் தூக்கிப்போட்டுக் கொன்றான். அதற்கு மறுநாள், தனக்குக் கலியாணச்சடங்கை நடத்தின அவன் இனத்து மதக்குருக்களை மாதாக் கோவில் கோபுரியிலேயே கழுத்தில் சுருக்குமாட்டி தொங்கவிட்டுக் கொன்றவன். பிறகு இங்கு வந்து இருந்தானு. அப்பொழுது வெள்ளைக்காரர்களுக்கு அவன் செய்யும் அட்டூழியங்கள் பெருத்த அவமானமாக இருந்தது, ஒருநாள் இராத்திரி அவனைச் சித்திரவதை செய்து கொன்று புதைத்து விட்டார்கள். அப்பொழுது அவன் கையிருக்கிறதே, பல கொலைகள் செய்த அந்த வலதுகை, அதைத்தான் முதலில் வெட்டினார்களாம். பிறகு அந்தக்கையைப் பதனிட்டு எங்கோ தொங்கவிட்டிருந்திருக்கிறார்கள். இந்த மந்திரவாதி இருந்தானே, அவன் காயசித்திபெற்றவன் என்று சொல்லிக்கொள்ளுவான். அவனும் அந்த சமயத்தில் இருந்தானும். எப்படியோ அந்தக் கையைத் திருடிக் கொண்டுவந்து ஒரு வெள்ளைக்காரப் பிசாசைத் தனக்கு அடிமையாக வைத்திருந்ததாகக் கதை. இந்தக் கதையைக் கேட்டதும் எனக்கு அதை வைத்திருக்கவேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. உடனே வாங்கிவந்தேன்" என்று கதையை முடித்தான் எங்கள் நண்பன்.

"இதை என்ன செய்யப்போகிறாய் ?" என்றேன்.

"இதை அறையில் கட்டித் தொங்கவிட்டிருப்பேன் ," என்றான் அவன்.

ராமராஜு என்ற நண்பன் பின்வருமாறு கூறவாரம்பித்தான். "இம்மாதிரியாகக் கையை யிழந்து மரணமடைந்தவனுடைய ஆத்மா, இழந்த கையைத் தேடும். அதை வைத்திருக்கிறவரைக் கொன்றுபோடும் என்று நான் கேட்டிருக்கிறேன்," என்றான்.

உடனே எல்லோரும் சிரித்தோம் 20ம் நூற்றாண்டிலும் இம்மாதிரி யபத்தியக்காரப் பேர்வழியுண்டாவென்று எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. அதிலும் வைத்திய மாணவன்.

M. K. நாயுடு என்ற பெரிய சூரி, எல்லாரையும் கோட்டாப் பண்ணுகிறவர். ஒருவரையாவது விட்டு வைக்க

மாட்டார். "ஆமாம்! இந்தப் புளி சொல்லுகிறதைக் கேட்டு முடிந்து வைத்துக் கொள்ளுங்கள். அந்தப் பாமேச்வானுக்கு மாமிசத்தில் இறுச்கு விரூந்திருக்கிறது. அலைந்துபோய் இதைக் கௌவிக் கொண்டு வந்திருக்கிறான்" என்று ஒரு போடுபோட்டார்.

சிறிது நேரம் எல்லோரும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்து விட்டுப் பிரிந்தோம்.

நானும் பாமேச்வானும் ஒன்றாக அவன் ரூமிற்குச் சென்றோம்.

அவன் அந்தக் கையை தன் கட்டிலிருக்குமேல் தொங்கவிட்டு, வாழ்வாவது மாயம் என்று சுவற்றில் எழுதினான்.

எனக்கும் பக்கத்தறைதான். நேரமாகி விட்டதென்று விடைபெற்றுக் கொண்டு சென்றேன்.

இரவு 2 மணி இருக்கும்.

நான் திடுக்கிட்டு விழித்தேன். எங்கோ கூப்பாடு, இரைச்சல்.

கண்ணை விழித்ததும் பாமேச்வானின் வேலைக்காரச் சிறுவன் என் பக்கத்தில் நடுநடுங்கிக்கொண்டு எழுப்ப முயல்வதை யறிந்தேன்.

முகத்தில் பயம் என்று எழுதியிருந்தது அவன் தோற்றம்.

"எஜமான், கொலை..........." என்று என்னவோ உளறினான்.

நான் அவனைக் கவனியாது எனது நண்பன் அறைக்கு ஓடினேன்.

அறையின் நடுமத்தியில் என் நண்பன் தலைவிரி கோலமாகக் கிடந்தான். கண்கள் உள்ளே சொருகிவிட்டன. வெள்ளை விழிமட்டும் பயங்கரமாக விழித்தது.

கைகால் தேகம் எல்லாம் முறுக்கிப் பின்னிக்கொண்டு கிடந்தன.

அவன் கழுத்தில் சிவப்புத் தடம், வளையம்மாதிரி. அதில் ஐந்து சிறு துவாரங்கள். அதன் வழியாக சிறிது இரத்தம் வடிந்துகாய்ந்து கிடந்தது. வாயிலிருந்தும் கடைவாய் வழிந்த சிறிது இரத்த ஓடை.

பக்கத்தில் போலீஸ்,—இரவு பீட் கான்ஸ்டேபிளும், அவன் கூப்பிட்டு வந்த ஒரு இன்ஸ்பெக்டரும்,—என்னவோ எழுதிக் கொண்டிருந்தார்கள்.

நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். எனது நண்பன் தொங்கவிட்டு வைத்திருந்த கையைக் காணவில்லை. பார்ப்பதற்கு பயங்கரமாகவும் அசிங்கமாகவும் இருக்கிறதென்று அதை எடுத்துவிட்டார்கள் போலிருக்கிறது.

போலீஸ் பின் வரும் ரிப்போர்டை எழுதியிருந்தார்கள்.

பாமேச்வான் என்ற வைத்திய கலாசாலை மாணவன் தஞ்சையில் நல்ல பண்ணைக் குடும்பத்தைச் சேர்ந்த பிராமணப் பையன். அவன் இரவு வந்ததும், தனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது என்று வேலைக்காரப் பையனை வெளியே அனுப்பிவிட்டு, படுத்துக் கொண்டான். இரவு ஒன்று அல்லது இரண்டு மணி சுமாருக்கு அவன் அறையில், பெருத்த இரைச்சல் கேட்க, வேலைக்காரன் உள்ளே ஓடிச்சென்று பார்த்தான். தனது எஜமானர் தலைவிரி கோலமாகக் கிடப்பதைக் கண்டதும் வெளியே வந்து ஆள்களை உதவிக்குக் கூப்பிட்டான். உடன் போலீஸார் வந்து விசாரணை செய்யத் தொடங்கினார்கள். டாக்டர் வந்து பரிசோதித்து, கொலைசெய்தவன், அமானுஷ்யமான பலம் பொருந்தியவனாக இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். கொலைஞனைப் பற்றி வேறு ஒரு புலமும் தெரியவில்லை.

எனது நண்பன் இறக்கவில்லை. ஆனால் அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. பைத்தியக்கார ஆஸ்பத்திரிக் கொண்டு போனார்கள்.

அங்கிருந்தும் ஒரே புலம்பல்தான் "கிட்ட வருகிறானே, விடாதே, பிடித்துக் கொள்ளுங்கள்." இதுதான் ஓயாமல்.

ஒரு நாள் நான் அவனைப் பார்க்கச் சென்றேன். துரும்பாக இளைத்துப் போனான். ஆளோ அடையாளம் தெரியவில்லை. அவனும் என்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை.

அவன் எதிரில் உட்கார்ந்து அவனைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். அவன் என்னைக் கவனிக்கவே இல்லை.

திடீரென்று எழுந்தான். "கழுத்தை நெருக்குகிறானே! விடாதேயுங்கள், கழுத்தை நெருக்குகிறானே!" என்று சத்தமிட்டுக் கொண்டு அறையைச் சுற்றிச் சுற்றி ஓடி வந்து மத்தியில் விழுந்தான். விழுந்தான், பிராணன் போய் விட்டது.

பிறகு பிரேத சமஸ்காரத்திற்குக் கொண்டு போனோம். அவன் தகப்பனாரும் வந்திருந்தார். ஆஸ்பத்திரிக்குப் பக்கத்தில் தான் மாயானம்.

அவனுக்குச் சிதையடுக்கிக் கொண்டிருந்தார்கள். பக்கத்தில் சற்று தூரத்தில் இருவர் ஏதோ குழிவெட்டிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று இருவரும் 'மனித எலும்பு' என்று கூவினார்கள். நான் பக்கத்தில் சென்று கவனித்தேன்.

உள்ளே ஒரு இடிந்த சமாதி. அதனுள் ஒரு பெரிய எலும்புக் கூடு. கண் குழியில் ஒரு புழு. அதன் வலது முழுங்கையிலிருந்துள்ள எலும்பைக் காணோம்.

என்ன?

அந்த சமாதிக் குழியில் ஒரு ஓரத்தில், எலும்புக் கூட்டின் இடது கையில் சுருங்கித் தோல் ஒட்டிக் கொண்டிருந்த முழுங்கைத் துண்டு கிடந்தது. இடக்கை விடமாட்டேன் என்ற பாவனையாக அதன் மீது கிடந்தது.

அதே கை!

குழி வெட்டிக் கொண்டிருந்தவன், அதைக் கண்டு விட்டான். "அடேடப்பா. கையை விடமாட்டாயோ" என்று எடுத்தான். அந்த எலும்புக் கூட்டின் கண் குழியிலிருந்த புழு நெளிந்தது.

"நீ அதை அங்கேயே போட்டு, மூடிவிடு," என்றேன்.

"அப்படித் தான் செய்ய வேண்டும் சாமி" என்றான்.

---

## கராச்சியில் பருத்தி ஏற்றுமதி

இந்தியாவிலிருந்து பருத்தி ஏற்றுமதி வெகுவாக அதிகரித்து வருகிறது. இந்த வருஷத்தில் (சீசனில்) காரச்சி துறைமுக மூலம் 1600000 பேல் பருத்தி வந்திறங்கியது. முன் வருஷத்தில் 9 லக்ஷம் பேல் பருத்தி இங்கிருந்து ஏற்றுமதியாகியது என்று காரச்சி பருத்திச் சங்க வருடாந்தக் கூட்டத்தில் அதன் தலைவர் ஸ்ரீமான் நிரஞ்சனப் பிரசாத் கூறினார்.



# ஒரு கதை சொல்லேன்!

(பி. எல். முத்தையா)



அப்போதே உருக்கி வார்த்த சொர்ணக் கிண்ணம் போல் பிரகாசிக்கும் மதி மன்னன், வெகு அழகாகவும் குளிர்ச்சியுடனும், தன் பரிவாரங்களான எண்ணற்ற நட்சத்திர சைன்னியங்களைத் திரட்டிக் கொண்டு புவனத்தைப் பவனிவருபவன் போல் ஜிலுஜிலுத்த காற்றாகிய ஏவலாளுடன் வெகு சுந்தரமாய்த் தனது குளிர்ந்த கிரணங்களைப் பரப்பிக் கொண்டு, கீழ் திசையில் வெகு கம்பீரமாக உதித்தான். சந்திரன் வரவைக் கண்டு சிறு குழந்தைகள் வெகு சந்தோஷமாக நிலவின் வெளிச்சத்தில் கொக்கரித்துக் கை கொட்டி விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சி பார்ப்போர் மனதைக் கவர்ந்து பரவசப்படுத்தும் தன்மை வாய்ந்த தாயிருந்தது.

நான் இரவு போஜனத்தை முடித்துக் கொண்டு, அந்த அதி அற்புத நிலவின் வெளிச்சத்தில், முற்றத்தில் ஓர் ஜமுக்காளத்தை விரித்து அன்று வந்த 'ஊழியன்' பத்திரிகையில் என்ன கதை வெளியாகி யிருக்கின்றது என்று வெகு ஆவலாகப் பிரித்துப் பார்த்துப் படித்துக் கொண்டிருந்தேன். படித்து முடிந்ததும் பக்கத்தைப் புரட்டிக் கொண்டிருந்தேன். என் தங்கை ஜமுக்காளத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு "அண்ணா! அண்ணா!" என்றாள். நான் பத்திரிகையில் கவனமாயிருந்ததால் பேசாமலிருந்தேன்.

"அண்ணா! பேசமாட்டாயா?"

"ஏன்? படித்து விட்டுப் பேசலாம்" என்றேன்.

மணி ஒன்பதுக்கு மேலாய் விட்டது. பத்திரிகையைக் கீழே வைத்தேன்.

"அண்ணா! ஒரு கதை சொல்லேன்!"

"எனக்குக் கதை சொல்லத் தெரியாதே."

"அண்ணா! சொல்ல மாட்டாயா?"

"தெரிந்தாலல்லவா சொல்லுவேன்."

"அப்போ கதை எழுதுறேன்னு சொன்னியே."

"ஆமாம்! அதற்கென்ன இப்போ."

"அந்தக் கதையைச் சொல்லேன்!"

"அந்தக் கதை ரொம்பப் பெரிசு; அதை நாளைக்குச் சொல்லுகிறேன்."

"பார்! பார்! நாளைக்கு நாளைக்குன்னு ஏய்க்கிறயே."

"நிஜமாய் நாளைக்குச் சொல்லுகிறேன். உனக்குத் தெரிந்தால் இப்போ ஒரு கதை சொல்லு."

"நீ ஒரு சின்னக் கதை சொல்லு. அப்புறம் நான் சொல்றேன்."

"அதோ பார்! நிலா எவ்வளவு பிரகாசமாயிருக்கிறது!"

"அண்ணா! எனக்கு ஒரு பாட்டுத் தெரியுமே!"

"என்ன பாட்டு?"

"நிலாப் பாட்டு."

"நிலாப் பாட்டு என்றால்!"

"பாடட்டுமா? பிறகு நீ ஒரு கதை சொல்லணும்!"

"சரி; பாடு."

"நிலா! நிலா! எங்கே நீ போறாய்?

களிமண் எடுக்க.

களிமண் என்னத்துக்கு?

சட்டி பண்ண.

சட்டி என்னத்துக்கு?

பணம் போட்டு வைக்க.

பணம் என்னத்துக்கு?

ஏழைகளுக்குதவி செய்ய!"

"தங்கச்சி! உனக்கு நான் இரண்டணா கொடுத்தால் என்ன செய்வாய்?"

"ஒரு அணா நான் எடுத்துக்குவேன்; ஒரு அணா ஏழைகளுக்குக் கொடுப்பேன்!"

"எனக்குக் கொடுக்க மாட்டையோ?"

"நீதானே எனக்கு கொடுக்கிறேன்னு சொன்னே!"

"சரி எனக்குத் தூக்கம் வருகிறது. நீ போய் படுத்துக்கொள். நாளைக்குக் கதை சொல்லுகிறேன்"

"சும்மா கண்ணை மூடிக்கொண்டு ஏய்க்கிறயே! அண்ணா! தீபாவளிக்கு நீ என்ன புடவை உடுத்தினே?

"நீ என்ன புடவை உடுத்திக் கொண்டாய்?

"நான் கதர்ப் பாவாடை உடுத்தினேன்."

"நானும் கதர் வேஷ்டி தான் உடுத்தினேன்"

"இனி மேலும் கதர்தானே உடுத்துவாய்?"

"ஆமாம்! அதோ! உன்னை அம்மா! கூப்பிடுகிறாள்; போய் ஏனென்று கேள்."

---

# வக்கீல் பரசுராம அய்யங்கார்

(எஸ். செல்லம்)

மேகநாதன் மாலதியை ஆசைப்பட்டான் என்பதைத் தவிர வேறு எந்த விதமான குற்றமும் அவனிடம் கண்டுவிட முடியாது. அவனுக்கு எத்தனையோ விதமான நண்பர்களிருந்தார்கள்; அவர்கள் அவனிடம் நடந்துகொண்ட மாதிரியும் பலவே; என்றாலும் ஒருவராவது அவன் கெட்டவன் என்று சொன்னதில்லை. யார் யாரிடம் எப்படி எப்படி நடந்துகொள்ளவேண்டுமோ அப்படியப்படியே நடந்துகொள்வான். என்பதோடு இயல்பிலும் மிகவும் நல்லவன். கடுஞ்சொல் பேசுதல் கடுகளவும் அறியான். உலோபகுணம் காண்பிப்பதை ஒரு போதும் தெரியான். சின முகம் காட்டுவதைச் சிறிதளவும் கற்றதில்லை. வஞ்சனை பேசுதலென்பதின் வகையே அவனுக்குப் புதிது. மக்கள் பிறப்பாலும், வளர்ப்பாலும், பழக்கத்தாலும் வெவ்வேறு சுபாவமடைகின்றார்களேயல்லாது, மூலாதாரமான இயற்கைக் குணங்களில் சிறிதும் மாறுபடுவதில்லையென்பது அவனது துணிபு.

இவ்வளவு நலம் பெருகியிருந்ததால் அவனை விரும்பினோர் பலர். ஆடவர்களாக அவனிடம் பழகிவந்தவர்கள் அனைவரும்—பெண்களில் அவன் தன்மையைத் தெரிந்தவர்கள் பலரும்—அவனை யொரு உத்தமமான தோழனாகப் பாவித்து வந்தார்கள்.

அவனுக்கு நாம் முதலில் காண்கின்ற இப்பொழுது வயது இருபத்துமூன்று. பி. ஏ. ஜூனியர் வரையிலும் படித்துவிட்டு, தானும் சேர்ந்து வேலையில்லா திண்டாட்டப் படையைப் பெருக்க வேண்டாமென்று கருதி, கொஞ்ச நாளாக விவசாயத்தில் ஈடுபட்டிருந்தான். உலகம் முழுதும் தலை கீழ்ப்புரண்டு, சகல சீவராசிகளும் அழிந்து ஒரு மனிதன் மட்டிலும் வாழ்ந்திருந்தாலும் விவசாயமென்கின்ற தொழில் வெம்பாது நடைபெறுமன்றோ? அதனையே உறுதி தரும் தொழில் எனக் கொண்டான் மேகநாதன்.

அவன் தந்தையாராகிய காலஞ்சென்ற பார்த்தசாரதி லஞ்சம் வாங்கியும் வறியோரை வஞ்சித்தும் ஏழைகளை ஏய்த்தும், கல்வியிலாரைக் காந்தும் சுமார் 30 ஏக்கர் வரை நன்செய் நிலங்களும் 150 ஏக்கர் புன்செய் நிலங்களும் (வெள்ள நாட்டுப் பகுதியில்) வாங்கியிருந்தார். அந்தச் சொத்தைத் தந்தையார் சம்பாதித்த வழி எவ்வளவு கொடுமையானது என்பது நம் மேகநாதனுக்குத் தெரியும். ஒவ்வொரு கணமும் அப்பூமியிலிருந்து தானியங்களும் தாவரங்களும் வளர்வதற்குப் பதிலாக அழிவும் தீமையும் தோற்றிவிடுமோ என்று அஞ்சுவான். அன்றி திருவாங்கூர் ஏழைகள் படும்பாட்டைப் பார்க்கையில் உத்தியோகஸ்தர் கோஷ்டியையும், பணக்காரர் படையையும் அழித்தொழித்துப் பரிபாலனம் செய்ய பகவான் பாலாழி சயனன்தான் கல்கியாக வந்து உதவ வேண்டுமென்பது அவன் எண்ணம். என்றால் அவன் விவசாயச் செயல் இதரர்களைப்போல் கடுமையாகவா விருக்கும்? அவன் தன் தந்தையார் கொடுமை செய்த ஏழையரைத் தேடிப்பிடித்து அந்நிலங்களைக் குத்தகைக்கு விட்டு அவர்களோடு அவனும் உழைத்து எல்லோரும் சமமான ஊதியம் அடையுமாறு பாடுபட்டு வந்தான். ஆதலால் வெள்ளநாட்டில் பல விவசாயிகள் அவனிடம் அன்பும் அபிமானமும் கொண்டனர்.

* * *

இத்தகைய மேகநாதன் ஜாகை வைத்திருந்தது திருவனந்தபுரம் புத்தன் சந்தையில் ஆம். வெள்ளநாட்டுக்கும் திருவனந்தபுரத்திற்கும் 15 மைல் தூரமுண்டு. திருவனந்தபுரத்தில் மேகநாதனது தெளிந்தமுகம், தெளிந்த பேச்சு, தெளிந்த வாழ்க்கை பலரை அவனுடன் பிணைத்துவிட்டன. அவனது தாயாராகிய பார்வதி அம்மாள் தன் புதல்வனைப் பொன்னேபோல் போற்றி வந்தாள்.

இவ்வாறு வாழ்க்கையில்— அவனும் தகுந்த பருவமுடைய இளைஞனல்லவா?—அவன் கவனம் பக்கத்துத் தெருவில் குடியிருந்த பரசுராம ஐயங்காரின் புதல்வி மாலதியின் பால் சென்று விட்டது.

மாலதி ஓர் விதவை. சிறு வயதில் ஒரு வக்கீலுக்கு வாழ்க்கைப்பட்டு 15வது வயது முதல் சந்நியாசியாக இருந்து வருகிறாள். அழகென்னும் படகில் பிரயாணம் செய்துகொண்டிருந்த அவளால் வைதவ்யத்தைத் தாங்கிக்கொண்டிருக்க முடியவில்லை. ஆதலால் தியங்கியும், தயங்கியும், மயங்கியும், கலங்கியும் எப்படி எப்படியோ சென்றது வாழ்க்கை. இணையற்ற பக்குவத்திலும் அழகிலும் பல இளைஞர்கள் ஈடுபட்டுத் தவித்தார்களென்றும், தன்னை விட மட்டமான பல பெண்கள் உலக இன்பம் துய்த்து சுகமாக வாழ்ந்து வந்தார்களென்பதும் நிதம் நிதம் அவள் மனதில் படும். அப்போதெல்லாம் மிகவும் உள்ளமுடைவாள். அஃதுடன்





ஆயுள் முழுதும் தன் வைதவ்யத்தைக் காத்துக் கொள்வது மிகவும் கஷ்டமென்றும் கண்டாள். இப்படிப்பட்ட பல விஷயங்களால் "என்றைக்காவது (அறிவு கெட்ட உலகம் நகைத்தாலும் நகைக்கட்டும்) வைதவ்யத்தை யொழித்துவிட்டு வெளியேறி விட்டாலென்ன வென்றும் நினைக்கலானாள்.

இந்த நிலைமையில் தான் மேகநாதனின் மனம் மாலதியை நாடிற்று. அவன் தன்னை விழைவதைக் கண்டதும், மாதவி மிகவும் வியப்புற்றாள். அப்பால் தனது முடிவை சாதித்துக்கொள்ளலாம் போல் நிச்சயித்தாள். ஆனால் சமூகக்கட்டும் தந்தை மீதுள்ள ஒரு சிறிய பற்றும் வீட்டை விட்டு நீங்கச் சம்மதிக்கவில்லை.

ஆகவே காதலர் இருவரும் இலேசு இலேசாகப் பார்ப்பதிலும் வேளாவேளைகளில் மௌனக் குறிகள் காண்பிப்பதிலும் காதலை வெளியிட்டு வந்தார்கள். ஆனால் மேகநாதனுக்கு வெளிப்படையாக அவளிடம் பேசிக்கொள்ள வெகுவாக அச்சம்; நாணம்.

ஒரு நாள் அவள் சுப்ரமண்யசாமி கோவிலுக்குச் சென்றுவிட்டு, காந்தாரியம்மன் கோவில் வழியாக வந்து கொண்டிருந்த போது, இரவு 8 மணியிருக்கும்—பெரிய சந்தல்லவா அது! மின்சார விளக்கின் சம்பந்தமும் இல்லையே—மேகநாதன் அவள் வருவதைக் கண்டு மெதுவாகக் கனைத்துக் கொண்டே பின்னடி நடந்து வந்து—ஆளில்லாத ஒரு இடத்திற்கு வந்ததும் தன் அங்கவஸ்திரம் அவள்மீது படும்படியாக நடந்து சென்றான். அதற்கவள் மெல்லப் பின்னடித் திரும்பிப் பார்த்துவிட்டு நாணப் புன்னகை பூத்தாள். அதன் கருத்து யாராவது பார்க்கின்றார்களா என்பதுதான். இதனைக் குறிப்பாலறிந்த மேகநாதன் "ஒருவருமில்லை" என்று கூறிய வண்ணம் மீண்டும் அருகில் சென்று அவளது கைகளைப்பற்றி ஒரு மு———இட்டான். அதற்கும் அவள் நாணம் கொண்டதைத் தவிர வேறொன்றும் சொல்லவில்லை. அவற்றிலிருந்து மேகநாதன், மாலதி தன் உறவை மிகவும் நாடுகின்றாள் என்று நிச்சயித்துக் கொண்டான்.

சுருங்கச் சொல்லுமிடத்து, காந்தாரியம்மன் கோவிலைக் கடருமுன்பு அவள் தன்னுடன் செல்வாளா மாட்டாளாவென்பதைக் கேட்டான். பன்முறை கேட்டும் அவள் ஒன்றும் பதில் கூறவே இல்லை. அப்பால் புத்தன் சந்தை ஹைரோடை அண்மியதும் மெதுவாக "அப்பா வக்கீல்.......துன்பம் ஜாஸ்தியாகும்" என்று கூறிவிட்டுப்போய் விட்டாள்.

அதனைப்பற்றி யோசித்தான் மேகநாதன் நீளமாக. எப்படி யெப்படியோ நினைத்தும் பொருள் விளங்கவில்லை. கடைசியில் 'தந்தை வக்கீலானதால் மிகுதியான வம்புசெய்யக்கூடும் இருவரும் ஓடிவிட்டால்' என்றுதான் கருத்துக்கொள்கிறாள் போலு மென்றெண்ணிக்கொண்டு ஒரு தந்திரம் செய்ய நினைத்தான்.

இரண்டு நாள் சென்றதும்—ஞாயிற்றுக்கிழமை—வக்கீல் பரசுராம ஐயங்காரிடம் சென்றான். ஏற்கெனவே அவர் மேகநாதனை அறிவார்.

வக்கீல் மேகநாதனைக் கண்டதும் ஆசனம் கொடுக்க, இருவரும் பேசத் தொடங்கினார்கள். தன் காதலன் தன் வீட்டுக்கே வந்துவிட்டானென்றால் சும்மாவா இருப்பாள் மாலதி? மெதுவாக வந்து ஜன்னலண்டை நின்று இருவரும் பேசுவதை கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

மேகநாதன், தன்னை யொருபெண் அன்பாகக் காதலிப்பதாகவும், அவனும் அவளை அளவிட முடியாதபடி தன் உயிர்போல் காதலிப்பதாகவும் அவளுடைய பெற்றோர் தடைசெய்து நிற்பதாகவும் கூறி யோசனைக் கேட்டான். அதற்கு வக்கீல் நகைத்துவிட்டு "அப்படியானால் அதொரு கஷ்டமா? தங்கட்கு அவளுடன் இந்த நிமிஷத்திலேயே சேர்ந்து வாழ உரிமை இருக்கிறதே" என்றார்.

பாவம்! வக்கீலுக்கு மேகநாதன் யாரைப் பற்றிப் பேசுகிறானென்பது புரியவில்லை. அவர் மேற்படி வாக்கியங்களைக் கூறியதும் மாலதி வெகுவாக ஆச்சரியமும் நாணமுமடைந்தாள்.

மேகநாதன்.—எப்படி எனக்கு உரிமையுண்டு? சற்று விளக்கவேண்டும்.

வக்கீல்:—ஒரு பக்குவமான பெண் தங்களைக் காதலித்து தாங்கள்தான் வேண்டுமென்று கூறும்போது தாய் தந்தையர் என் செய்ய முடியும்?

மேகநாதன்:—ஏன்?

வக்கீல்:—சட்டம் இடம் கொடுக்காது. கல்யாணம் செய்து கொள்வது ஒவ்வொரு ஆடவனுடையவும், பெண்ணினுடையவும் உரிமை. அதில் பெற்றோர் தலையிடுவது தவறு...........

மேகநாதன்:—அப்படியானால் நான் என்ன செய்வது?

வக்கீல்:—நாகரிகமாக இருவரும் இந்த நிமிஷத்திலேயே கூடி வாழலாம்—எவரும் தடைசெய்ய முடியாது.

மேகநாதன்:—ஒருகால் ஏதேனும் கெடுதி நேரிட்டால் நீங்கள் உதவி செய்ய வரவேண்டும்.

வக்கீல்:—நன்றாக வருகிறேன். கூடுமானால் கல்யாணத்தை நானே இருந்து நடத்தி வைக்கிறேன்..............(நகைத்துக்கொண்டு) பெண் எப்படி?

மேகநாதன்:—நிரம்ப அழகு; நல்ல பருவம். அதைவிட, என்னை அடைய மிகவும் ஆசைப்படுகிறாள்.

வக்கீல்:—அதுதான் இப்படிப்பட்ட தகாறுகளில் முக்கியம். பெண் மனமிருந்தால் எதுவும் சாதிக்கலாம்.

* * *

இவ்வாறு பேசி முடிவதற்குள் பன்முறை மேகநாதன் ஜன்னலைப்பார்த்து "கேட்டுக் கொண்டாயா மாலதி" என்று பொருள்படும்படியாக கண்ணெறிந்து விட்டான். விஷயம் புரியாத வக்கீல் யாதும் நினைத்தாரில்லை.

* * *

அன்றிரவு மணி 12. நல்ல இருள். மாலதி மணப்பெண்போல் ஆடையணிகள் அணிந்து கொண்டு கொல்லைப்புற வாயில் வழியாக வெளியே வந்தாள். மேகநாதனின் வண்டி தயாராக நின்றது. அதில் இருவரும் சுமார் 3 மணிக்கெல்லாம் வெள்ள நாடு சென்று சேர்ந்து விட்டார்கள்.

அங்கிருக்கும் குத்தகைக்காரர்கள் விடுவார்களா! தங்கள் ஜென்மியைப் பொன் போல் பாதுகாத்துப் 'போற்றி வந்தார்கள்.

சுமார் 10 நாட்களாயின. ஊரெங்கும் தேடி, வயிறெல்லாம் எரிந்து, மூளையெல்லாம் கரிந்திருந்த வக்கீல் தன் மாலதி மேகநாதனோடு போய் விட்டாள் என அறிந்தார்—அறிந்தால் என் செய்ய முடியும்? அவர்தான் சட்டப்படி உபதேசம் கூறியிருக்கிறாரே? வாயை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். சீர்திருத்தவாதிகள் புதல்வியை விதவையாக்கிய நிலைமைக்கு அது ஏற்ற தண்டனை, தானென்று நினைத்துக் கொண்டார்கள்.

வக்கீல்களெல்லாம் நடந்த விஷயத்தைப் பற்றி நினைந்து நினைந்து சிரித்தார்கள். இப்போது யாராவது கக்ஷிக்காரர்கள் யோசனை கேட்க வந்தால், வாதிப் பிரதிவாதிகள் யார் யார் என்று தெரிந்தல்லாமல் யோசனை கூறுவதில்லை திருவனந்தபுரத்தில்.

---



# பெர்னார்டு ஷா

(ஜீவிய சரித்திரங்களை எழுதுவதில் வல்லவரான, திரு. ஏ. ஜி கார்டினர் சிறிது காலத்திற்கு முன்பு எழுதியதின் சாரம். திரு. கார்டினர், ஓர் இலக்கிய கர்த்தா. அவருடைய நடை மிகுந்த அற்புதமானது, நளினமானது. கார்டினர், பிரமுகர்களைப் பற்றி எழுதும் வியாசங்கள், ஆங்கிலத்தில் எழுத்தோவியங்களாகத் திகழுகின்றன. குத்தலாகவும், கேலியாகவும், ஹாஸ்யமாகவும், மிகவும் நயமான உணர்ச்சிகளை எழுப்பக்கூடியதுமான அவரது நடையும், பெரிய மனிதர்களின், முக்கிய அம்சத்தைத் தெரிந்து விளக்குவதும், அவரது தனிப்போக்கு. ஆங்கில இலக்கிய கர்த்தர்களில் இவரைப் போல் ஜீவிய சரித்திரங்களை ஜீவ சித்திரங்களாக எழுதுவது மிகச் சிலரேயாவர்.)

நான் பெர்னார்டுஷாவிற்காக வருந்துகிறேன். ஜோனுப் ஆர்க்கு என்ற பிரஞ்சு வீரப் பெண்மணி, கிரிஸ்தவர்களால் ஞானி ஆக்கப்படுவதற்கு இரண்டு நூற்றாண்டுகளாவது காத்திருக்க வேண்டியிருந்தது; ஆனால் இந்த வுலகத்தில் நடமாடிக் கொண்டிருக்கும் பொழுதே பெர்னார்டுஷா, இந்த நாயனாராக்கப்படும் அபாயத்திற்கு உள்ளாகிவிட்டார். இப்பொழுதே அவருக்குக் குட்டிச்சாமியாரின் (Minor Canon) மரியாதை கிடைத்துவிட்டது. டீன்கள் என்ற சாமியார்கள் அவரைத் தோட்டக் கச்சேரிகளுக்கு அழைக்கிறார்கள். ஆர்ச்சு பிஷப்புகள் என்ற மதக் குருக்கள்களும், அவரை ஒரு மாதிரியாக வரவேற்க ஆரம்பித்து விட்டார்கள். இந்தத் 'தொந்திரவு பிடித்த ஆசாமியை' அமுக்கிவைக்க முயன்ற விமர்சனக்காரர்கள், அவர் அதிவிவேகி என்ற அபிப்பிராயத்திற்குத் திரும்பி விட்டார்கள். அவரை ஷேக்ஸ்பியருடன் சேர்த்துப் பேசும்பொழுது, இப்பொழுது அவர்கள் சிரிப்பதில்லை. அவர் பேசும்பொழுது என்ன கூறுகிறார் என்று அர்த்தப்படுத்திக் கொள்ளாமல் இருந்த முட்டாள்கள் என்று பிற்காலத்தவர் கூறிவிடுவார்களோ என்று பயப்பட ஆரம்பித்துவிட்டார்கள், புஸ்தகவுலகத்திலே, அவருடைய புத்தகங்கள் தான் ஏராளமாக விற்பனையாகின்றன; பொதுமக்கள் அவருடைய நாடகங்களுக்குத் திரள்திரளாக வந்து அதன் பொருளை, உள் அர்த்தத்தை விவாதிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அவருடைய புத்தகங்கள், இலட்சிய கிரந்தங்களாகி விட்டன. அவரைப் பார்க்கும் பொழுதே தலையைச் சுற்றி ஜோதி தென்படும் போலிருக்கிறது. இந்தக் குறிகளை நான் தப்பிதமாக அர்த்தப் படுத்திக் கொள்ளவில்லை. அவர் கொஞ்ச நாட்களில் நாயன்மார்கள் ஜாபிதாவிற்குள் சென்று விடுவார் * அவருக்கு எழுபது ஆகிவிட்டது; கனல் போன்ற சிவந்ததாடி வெளுத்துவிட்டது ஆனால் இன்னும் வாலிபம் மாறாத இளங்காளைப்போல் நேரே நிமிர்ந்து நடக்கிறார். இன்னும் கொஞ்ச காலத்தில், அவர் விஸ்தரிக்கும் பழம் பிரிதிகளை (Ancients)ப்போல், ஸெயின்ட் பெர்னார்ட் என்ற சாமியாருடன் கோவிலில் குடியிருந்து விடுவர் என்பதில் சந்தேகமில்லை.

இவர் கேலி செய்து, கையாண்டி பண்ணி, கசையடி கொடுக்கப்பட்ட உலகம் சரியான பழிக்குப் பழியாக இதைச் செய்துவிட்டது. ஏனென்றால், எப்பொழுது ஒரு தீர்க்கதரிசி போற்றப்பட்டு தெய்வமாகக் கொண்டாடப்படுகிறானே அப்பொழுதே அவருடைய வார்த்தைகளின் பலன் அழிந்துவிட்டது என்று அவருக்குத் தெரியும். எதுவரை பொதுஜனப் பீடை என்று கல்லாலடிக்கப்பட்டு, நமது சௌகரியமான வழக்கங்களைக் குலைத்து நாம் வழிபடுகிற தெய்வச்சிலைகளை உடைத்து, நமது வைதிக வழக்கங்களை உடைக்கிறானே, அதுவரைத்தான் தீர்க்கதரிசி நமக்கு உபயோகமாக இருக்கமுடியும். ஷா வீண்பெருமைக்காரராக இருந்தால், பொது ஜன அபிமானத்தையும், மரியாதையையும், பாராட்டுதலையும் அனுபவித்து சந்தோஷப் படுவார். அவரைப் போல் தன்னைப்பற்றி வீண் பெருமை யடித்துக் கொண்டவர் ஒருவர் கிடையாதாயினும், அவர் உண்மையில் வீண் பெருமைக் காரரல்ல. "நான் பிறப்பிலேயே போக்கிரி" என்று தம்பட்டம் அடித்துக்கொள்ளுகிறார். "ஹோமரைத் தவிர, இந்த உலகத்து பெரிய கிரந்த கர்த்தாக்களின், ஷேக்ஸ் பியரைப் போல் நான் வெறுக்கிறவர் கிடையாது. சில சில சமயங்களில் ஏற்படும் வெறுப்பு, அவர் சமாதிக்குழியைத் தோண்டி அவர்மீது கல்லெறிய வேண்டும் என்று என்னைத் தூண்டுகிறது."

* ஸ்ரீ ஷாவுக்கு தற்பொழுது ஏறக்குறைய எண்பது வயதாகி விட்டது.



இம்மாதிரியான அபாரமான அபத்தம்—அது அவரிடம் நிறையாக இருக்கிறது;—வீண் பெருமைப் பித்தமோ என்று நாம் எண்ணும்படி இருக்கிறது. ஆனால் இந்தமாதிரி கோமாளிவேஷம் போடும் ஷா வீண் பெருமைக்காரரல்ல; உலகத்தில் மிகவும் அடக்கமாக ஆசாமி யார் என்றால் அவர்தான். தன்னுடைய அபிப்பிராயங்களை விளம்பரப் படுத்துவதற்காக, இந்தக் கோமாளி வேஷம் போடுகிறார். வாயைப்பிளந்து நோக்கும் பொதுமக்களுக்கு, இந்தக் கோலத்தைக் காண்பித்துவிட்டு, அவரது நெருங்கிய நண்பர்களுக்கு அவரது சீரிய குணங்களைக் காண்பிக்கிறார். தனது வாழ்க்கையைப்பற்றிச் சிறிதும் கவனியாது, மற்றவர்களுக்காக எவ்வளவு தூரம் உதவி செய்யவேண்டுமானாலும் கஷ்டப்படுபவர் அவர்தான். இலக்கிய உலகப் பெரியார்களிலே பொறாமை முதலிய சிறுமைக் குணங்கள் சிறிதேனும் இல்லாத இருவருள் அவர் ஒருவர். அவருடைய தயாள குணம் அவருடைய வேடிக்கைப் பேச்சைப்போல் அவ்வளவு விசாலமானது. அதிக வரும்படி வரக்கூடிய சில வேலைகளை, ஒரு நண்பருக்காக ஒரு நாடகம் எழுதுவதை முன்னிட்டு வேண்டாமென்று தள்ளியதும் உண்டு.

அவருடன் பேசுவதே ஒரு அனுபவம். தன் நினைப்பற்ற பேச்சு, செயற்கைக் கலப்பற்று உள்ளிருந்தெழும் வேடிக்கைப் பேச்சு. அவருடன் பேசுவதே ஒருவன் மனதைப் பரிசுத்தப் படுத்தும். அக்கசாலையிலிருந்து கொட்டும் நாணயங்களைப் போல், பிரகாசமாக எண்ணங்களைத் தொடர்ந்த எண்ணங்களுடன் குரோதமற்று தான் என்ற உணர்ச்சியற்று வெளிப்படும். அவருடன் சண்டை போட்டுக் கொள்ளவே முடியாது. அவருடைய கேலியும், நிந்தையும் மனதைச் சல்லடைக் கண்களாகத் துளைத்தாலும், நமது முட்டாள் தனங்களையும், அசட்டுத்தனங்களையும் போக்கி, நம்மை உடன்பிறந்த ஜீவனாக பிரியமாக இருப்பார். அவருடைய வீண் பெருமையைச் சாந்தி செய்வதற்கென்று அவரைக் கொண்டாட வேண்டிய அவசியமில்லை. அவர் அதனால் தனது ஆற்றலுக்குப் பங்கம் வரும் என்று பயப்படுகிறார். நிரந்தரமான பெருமை என்று தன்னை ஆக்கிக்கொள்ளப்பிரியமே கிடையாது. அதாவது நம்பிக்கை வைத்து, பக்தி செலுத்தி, மறக்க மறக்கப்படும் தீர்க்கதரிசியாக அவருக்குப் பிரியமே கிடையாது. சந்திச் சண்டைக்குப் பொருளாகவும், விவாதத்தின் தத்துவமாகவும், யுத்தகோஷத்தின் சங்கொலியாகவும் இருக்கவேண்டுகிறார்.

பிரசாரம் தான் அவருடைய முக்கியத்தொழில். நாடக கர்த்தர்களில் முதன்மையானவரும் அவர்தான். அவர் எந்த முறையைக் கையாண்டாலும்,—சிறுகதையோ, நாவலோ, அல்லது நாடகமோ—அதைத்தன் கொள்கையைப் பரப்பும் பிரசங்கமேடையாக்கிவிடுகிறார். அவர் எழுத்தின் ரகமே வேறு. பிரசங்கங்கள் என்றால் 'நீண்ட மூஞ்சி அழுகை' என்றல்ல அர்த்தம். பழைய நைந்த விஷயங்களானாலும் அவர் சொல்லும் தினுசே வேறு. அவருக்கு முக்கியமானது கலையல்ல, வாழ்க்கை.

ஷாவைப்பற்றிப் பொதுவாக, அவர் எதையும் உடைத்துத்தகர்ப்பவர் என்ற எண்ணம் இருந்துவருகிறது. பெர்னார்டு ஷா அவ்வளவு தான் என்று நினைப்பவர்கள் அவரை முழுவதும் அறிந்து கொள்ளவில்லை. அவருடைய மதம் மனித பரிணாமத்தின் ஆத்மிக வளர்ச்சியின் கொழுந்து. இருக்கும் மதங்களை அவர் உடைத்தெறியலாம்; ஆனால் அவர் தான் அவற்றின் ஜீவநாடியை அறிந்தவர்.

ஷாவின் இலக்கியம் உயர்ந்த கலையா, நிரந்தமான அழகு வாய்ந்ததா என்ற பிரச்னை விவாதிக்கப்படுகிறது. அவை கலையாக இல்லாமல் இருக்கலாம்; ஆனால் அது வாழ்க்கையைத் தூறுவுகிறது. ஷா என்ற தத்துவசாஸ்திரி கோமாளி வேஷம்போட்டார், தனது சரக்கைச் சொல்ல. அதுதான் அவரது இலக்கியங்கள்.

# ராஜாமணி ("பாலன்")

அன்று பௌர்ணமி. முழுச் சந்திரன் தனது வெள்ளிபோன்ற கிரணங்களைப் பெருமிதமாக வீசி வீசிப் பிரகாசித்துக் கொண்டிருந்தான். சங்கரநயினார் கோவிலிலிருந்து தென் காசிக்குப் போகும் ரஸ்தாவில் சதங்கைகள் ஒலிக்க, இரண்டு பெரிய மாடுகள் பூட்டப்பட்ட ஒரு 'பெட்டி வண்டி' தென்காசியை நோக்கி மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. சாலையின் இருபக்கங்களிலும் பெரிய ஆலமரங்கள் செழிப்பாக வளர்ந்திருந்ததால் ரோடு முழுவதும் இருளாக இருந்தது. ஆனாலும் பூர்ண சந்திரனின் வெள்ளிக் கிரணங்களானது அந்த ஆலமரங்களின் இலைகளினாலும் 'கொப்புகளினாலும்' முதலில் தடுக்கப்பட்டு, பிறகு காற்றடிக்கும்போது 'கொப்புகள்' அசைவதால் ஏற்படக்கூடிய இடை வெளியின் வழியாக அந்த வண்டி மீதும், காளைகளின் மீதும் பட்டுக் கொண்டிருந்தது. அது மின்னலைப்போல், விநாடி நேரத்துக்கு வெளிச்சம் கொடுத்து பிறகு ஒரே அந்தகாரமாகத் தோன்றிக் கொண்டிருந்தது.

வண்டி மெதுவாகத்தான் சென்று கொண்டிருந்தது. சங்கரநயினார் கோவிலிலிருந்து அரை மைல் தூரம் (சுமார்) வந்திருக்கலாம். சற்று வெளிச்சம் தெரிந்தது. தெரியவும் வண்டி சட்டென்று நின்றது. வண்டியிலிருந்து ஒரு மனிதர் இறங்கினார். அவரைப் பின் தொடர்ந்து ஒரு அம்மாளும் இறங்கினார்.

இவர்கள் யார்? அங்கே அந்த நேரத்தில் போவானேன்? என்று கேள்விகளெல்லாம் பிறக்கின்றன. சொல்லிவிடுகிறேன். அந்த மனிதருக்குத் தென்காசி. அவர் பெயர் சாமிநாத ஐயர். அந்த அம்மாள் அவரது பத்தினி. சுமாரான பணக்காரர்கள். சங்கரன் கோவிலில் அன்று ஆடித்தவசானதால் அதற்கு வந்துவிட்டு தமது சொந்த வண்டியிலேயே ஊருக்குத் திரும்பச் சென்று கொண்டிருந்தார்கள். இனிக் கதையைத் துவக்குவோம்.

'அப்பா! அப்பா!' என்ற ஒரு குழந்தையின் அழுகுரலைக் கேட்டுத்தான் அவர்கள் கீழே இறங்கினார்கள். கொஞ்சநேரம் எல்லோரும் கவனித்துக் கொண்டு நின்றனர். சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு சிறு பெண் குழந்தை, (ஆறு வயதிருக்கலாம்) "அப்பா! அப்பா!" என்று அழுது கொண்டே




இவர்கள் நிற்குமிடம் வந்தது. சாமிநாத ஐயர் அக்குழந்தையைக் கூப்பிட்டு நயமாய் வண்டியில் ஏற்றிக்கொண்டு (தாங்களும் ஏறிக்கொண்டு) வண்டியை ஓட்டச் சொன்னார். வண்டியும் புறப்பட்டது. வண்டிக்குள் சாமிநாதய்யர் குழந்தையைச் சமாதானப்படுத்திப் பார்த்தார். ஆனால் அது அழுது கொண்டுதானிருந்தது. அக்குழந்தையினிடமிருந்து, அக்குழந்தையும் அதன் தகப்பனாரும் ஆடித் தவசுக்கு வந்தார்களென்றும், கூட்டத்தில் தகப்பனும் குழந்தையும் பிரிந்துவிட்டார்களென்றும் மாத்திரம்தான் தெரிந்துகொள்ள முடிந்தது.

சற்று நேரமானதும் குழந்தை படுத்து உறங்கிவிட்டது. சாமிநாதய்யருக்கு ஏற்கனவே குழந்தைகளில்லாததால் இக்குழந்தை கிடைத்ததைப்பற்றி அவரும் அவரது மனைவியாரும் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர்.

சாமிநாதய்யர் மறுநாட் காலையில் குழந்தையை எழுப்பி அதன் சட்டை, பாவாடை முதலியவற்றையெல்லாம் கழற்றினார். என்ன ஆச்சரியம்! அச் சிறு குழந்தையின் — ஆறு வயதுக் குழந்தையின் — கழுத்தில் ஒரு திருமங்கல்யம் இருந்தது. அதைத் திருப்பிப் பார்த்ததில் பின் பக்கத்தில் — 'ராஜா மணி' என்ற பெயர் செதுக்கப் பட்டிருந்தது. எனவே அக் குழந்தைக்குக் கலியாணமாகி யிருந்தது என்று அறிந்தார். சாமிநாதய்யர் சடக்கென்று ஒரு யோசனை தோன்றியவராய் அந்தத் திருமாங்கல்யத்தைக் கழற்றி அதனுடன் ஒரு குறிப்பும் எழுதி பெட்டிக்குள் வைத்துப் பூட்டிவிட்டார். ஊராரிடத்தில் இக்குழந்தை தனது தூரபந்துவின் மகளென்றும்தான் இக்குழந்தையை அபிமான புத்திரியாக வளர்க்கப் போவதாயும் கூறிவிட்டார். வண்டிக்காரனிடமும் எச்சரிக்கை செய்துவிட்டார்.

குழந்தையை வெகு செல்வமாக வளர்த்து வந்தனர். குழந்தையும் பள்ளிக்கூடத்தில் சற்று வாசித்துக்கொண்



டும் ஊர் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டும் நன்றாக—அழகாக—வளர்ந்தது. இவர்கள்தான் தனது தாயும் தகப்பனும் என்று எண்ணிக் கொண்டது போலும்.

* * *

தென்காசியில் ஜம்புகேசுவாய்யர் ஒரு பணக்காரர். அவருக்குக் குழந்தைகள் இல்லை. எனவே தனது பந்து ஒருவரின் பையனான ராமநாதன் என்னும் பத்து வயதுப் பையனை ஸ்வீகாரம் செய்து கொண்டார். அவனும் நல்லகுணமுள்ளவனாக இருந்தான். ராமநாதன் தென்காசிக்கு வந்ததும் சுவாமிநாதய்யருக்குப் பெண் கிடைத்ததும் ஒரே வருஷம் என்பது நேயர்களுக்குத் தெரியவேண்டும். சுவாமிநாதய்யரின் புத்திரியும் ராமநாதனும் கொஞ்ச நாளில் பழகிக்கொண்டனர். இரண்டுபேரும் சேர்ந்து பள்ளிக்கூடம் போய் வருவது வழக்கமாக இருந்தது. இப்படி ஆறு வருஷங்கள் கழிந்தன. ஸரோஜிக்கு வயது பன்னிரண்டு ஆகிவிட்டதால் அவள் ராமநாதனுடன் பள்ளிக்கூடம் வரமுடியாமற் போய்விட்டது; என்றாலும் அவர்கள் சந்திப்பது நிற்கவில்லை. அவர்களுக்குப் பேசுவதற்கு என்ன சங்கதிதான் இருக்குமோ! ஒருவரையொருவர் பார்த்துக்கொள்வதே அவர்களுக்கு ஆனந்தமாயிருந்தது போலும்.

* * *

'என்ன நீங்கள் இன்னும் சும்மா. இருக்காப்லே இருக்கே. ஸரோஜாவுக்கு வயசு பன்னிரண்டு ஆறது. கலியாணம்-பண்ணவேண்டாமா? ஒரு நல்ல பிள்ளை பார்த்துக்கொண்டு வாருங்கோ' என்றாள் சுவாமிநாதய்யரின் மனைவி அவரிடம்.

'அதுக்கென்னடி! எங்கேயாவது தேடப்போணுமா? ஜம்புகேசுவய்யரின் பிள்ளை ராமநாதன் தான் இருக்கிறானே; அவருக்கு ஏராளமான பணம் இருக்கு. பையன் நன்றாக இருக்கிறான். எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை பாஸ் செய்திருக்கிறான் அவரிடம் சொன்னால் போகிறது' என்று சாவதானமாகப் பதில் சொன்னார்.

'சீக்கிரம் நடக்கணும்' என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

* * *



சாமிநாதய்யர் ஈஸிச் சேரில் சாய்ந்து கொண்டு தலையைக் 'கோதிக்கொண்டிருக்கிறார்'. இளஞ்சூரியனின் கிரணங்கள் ஜன்னல் துவாரத்தின் வழியாய் அறைக்குள் வருகிறது. கடிகாரம் 'டிக் டிக்' என்ற சப்தித்து 8-30 என்று காட்டுகிறது. 'ஸரோஜா' என்று கூப்பிட்டார் சாமிநாதய்யர்.

'என்ன அப்பா' என்று ஸரோஜா அறைக்குள் வந்தாள். 'உன்னிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டும்; கவனமாய்க் கேள். நீ எனக்குச் சொந்தப் புத்திரியல்ல. உன்னைச் சங்கரன் கோவிலில் கண்டெடுத்தேன். அப்பொழுது உன் கழுத்தில் ஒரு திருமாங்கல்யம் இருந்தது. அதனால் உனக்குக் கலியாணம் ஆயிருந்தது என்று தெரிந்ததும், உன் திருமாங்கல்யத்தைக் கழற்றி அதோடு விவரத்தையும் எழுதிப் பெட்டிக்குள் வைத்திருக்கிறேன். இப்பொழுது உன்னைத் திரும்பவும் ராமநாதனுக்கு கலியாணம் செய்து கொடுப்பதாக நிச்சயித்திருக்கிறேன். உன் மனது என்ன?' என்று கேட்டார்.

ஸரோஜா திடுக்கிட்டுப்போனாள்; என்றாலும் 6 வருஷங்களாக வாரத கணவன் திரும்ப வரப்போகிறான் என்ற தைரியத்தாலும், ராமநாதனிடமுள்ள பிரியத்தினாலும் வளைந்து குழைந்து வெட்கி எப்படியோ பதில் கூறிவிட்டாள்.

இப்பொழுது ராமநாதனும் ஸரோஜாவும் தனிமையாக சுவாமிநாதய்யர் வீட்டில் சுகமாக வாழ்ந்து வந்தனர்.

ராமநாதன் ஒருநாள் ஏதோ தனது மாமனாருடைய பழைய கணக்கைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். அங்கு ஒரு கணக்குப் புத்தகத்திலிருந்து பொத்தென்று ஒரு 'பொட்டலம்' விழுந்தது. அதை யெடுத்துப் பார்த்ததில் ஒரு திருமங்கல்யமும், ஒரு கடிதமும் இருந்தன

'கடிதத்தில்,

"ஸரோஜா சங்கரன் கோவிலில் ஆடித் தவசில் கண்டெடுக்கப்பட்டாள். அவள் கழுத்தில் திருமாங்கல்யம் இருந்தது. அந்தப் பையன் பெயர் 'ராஜாமணி' என்று அந்த மாங்கல்யத்தின் பின் பக்கத்தில் செதுக்கப்பட்டிருந்ததிலிருந்து தெரிந்து கொண்டேன்.

—சுவாமிநாதய்யர்.

எழுதியிருந்ததைப் பார்த்ததும் தனக்கு தன் ஸ்வீகாரத் தகப்பனார் 'தன் பெயர் ராஜாமணியென்றும், தனக்கு கலியாணமாகி யிருந்ததென்றும், அப்பெண்ணும் தகப்பனாரும் சங்கரன் கோவிலுக்கு போனவர்கள் திரும்பி வரவேயில்லையென்றும்' சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. ஸரோஜாதான் தனது முன் மனைவியென்று அறிய அவன் அடைந்த சந்தோஷத்தை விரித்தெழுத முடியாது.

* * *

மாலை சுமார் மணி 5 இருக்கும். மாலைச் சூரியனின் செந்நிறக் கிரணங்கள் பொன்போல பட்டவிடத்தையெல்லாம் பிரகாசிக்கச்செய்து கொண்டிருந்தது. தென்காசி பிராமணர்கள் அக்கிரகாரத்தில் ஒருவரிருவர் போய்ந்

# முற் பிறப்பை அறிய நவீன மார்க்கம்

## 'விஞ்ஞானத்தின் விழுமிய நிலை'

மனோவசிய சாஸ்திரிகள், மனதை, குழந்தைப் பருவ நினைவுகளுக்கும், அதற்கு முன்னும் திருப்பிவிடும், ஆராய்ச்சியை சமீபத்தில், செய்திருக்கிறார்கள். மனிதன் பிறக்கு முன் அவனுக்கு நினைவுகள் இருக்கின்றனவா, அந்த நினைவுகள் எப்படி ஏற்பட்டது என்பதைப் பரீட்சித்துப் பார்த்து வருகிறார்கள்.

சமீபத்தில், பீப்பில் (People) என்ற பத்திரிகையில், இந்தப் பரீட்சை மனித வர்க்கத்தையே மாற்றிவிடும் என்று ஒருவர் எழுதியிருந்தார்.

அதில், அவர் வருங்கால ஆராய்ச்சிகளை எல்லாம் டாக்டர் அலெக்ஸாண்டர் கேனன் என்பவர் செய்வார் என்றும் எழுதியிருந்தார்.

தற்பொழுது டாக்டர் அலெக்ஸாண்டர் கேனன் என்பவர் மனதை மனிதன் பிறப்பதற்கு முன் அவனுக்கு இருந்த நினைவுகளை எண்ணுவதற்குத் தூண்டமுடியும் என்று சொல்லுகிறார்.

'உண்மைச் சக்திகள்' என்ற புத்தகத்தில் அந்த டாக்டர் தான் செய்த பரீட்சைகளை எல்லாம் விஸ்தரிக்கிறார். அதில் பல அநுபவம் பொருந்திய விஞ்ஞான ஆராய்ச்சிக்காரர்களும் வைத்திய நிபுணர்களும் கலந்து கொண்டார்கள்.

இந்த ஆராய்ச்சிக் கமிட்டியினருக்கு அறிமுகம் இல்லாத ஒரு ஸ்திரீயை, தங்கள் பரீட்சைக்காகக் கொண்டுவந்து அவளை வசிய நித்திரையில் ஆழ்த்தினர். இம்மாதிரியான நிலையில், அவளது பழைய நினைவுகளைப் பரீட்சித்தனர்.

"அவள் ஆகஸ்ட்டு 4ந்தேதி 1924 வருஷம், அதாவது பரிட்சை நடப்பதற்குப் பத்து வருடங்களுக்கு முன் என்ன நடந்தது என்பதை நினைவிற்குக் கொண்டுவர வைக்க முயற்சித்தோம். அவள் அப்பொழுது பத்து வருடத்திற்கு முந்திய அநுபவங்களை மறுபடியும் நடிக்க ஆரம்பித்தாள். அந்தப் பத்துவருடத்திற்கு முந்திய சம்பவங்கள், அவளுக்கு வெறும் எண்ணமாக மட்டும் இருந்துவிடவில்லை. அப்பொழுது அவளுடைய மனது பத்து வருஷத்திற்கு முந்திய காலத்தில் இருப்ப சென்ற பிறகையில், அந்தப் பழைய நினைவுகளை மறுபடியும் நடிக்கத் தொடங்கிவிட்டது.

"அப்படிக் கிடைத்த சமாசாரங்கள் உண்மைதான் என்று சோதிக்கப்பட்ட பின், மறுபடியும் பத்து வருஷம் தள்ளி, அவள் எண்ணங்களை 1914 ஆகஸ்ட் 4 வரைக் கொண்டு சென்றோம்.

"அவள் மறுபடியும் அக்காலத்திய சம்பவங்களை மறுபடியும் அநுபவித்தாள். இப்படியே பத்துப் பத்து வருஷமாகத் தள்ளி, கடைசியாக ஒவ்வொரு வருஷமாகத் தள்ளிக்கொண்டு சென்று, அவள் பிறந்த மறுநாள் வரை கொண்டு விட்டோம். அவள் பிறந்த பிறகு முதல் முதலாக ஸ்நானம் செய்ததை விஸ்தரித்தாள். பிறகு நாங்கள் அதற்கு முன்பும் அவள் நினைவுகளைத் தள்ளி வைத்தோம். அதாவது அவள் பிறப்பதற்கு அரை மணி நேரம் முன்பு அவள் நினைவை நிறுத்திவைத்தோம்.

"அவள் 'ஓ' வென்று அழுது எங்கும் இருட்டாக இருக்கிறதென்றும், அவள் கேட்ட சில ஸப்தங்களையும் விஸ்தரித்தாள். அந்த சப்தங்கள் ஒருவேளை இரத்தக் குழாய்களில் ஓடும் இரத்தத்தின் இரைச்சலாக இருக்கலாம். அவள் தாய் எங்கு இருக்கிறாள் என்று அவள் விஸ்தரித்தாள். ஆனால் அவள் தாயாரைக் காண முடிகிறதா என்று நாங்கள் கேட்க, தெரியவில்லை என்று பதில் கூறினாள். ஆனால் அவளுக்குத் தாய் இருக்கும் இடம் எங்கு என்று தெரிந்ததாம். ஏனென்றால் அவளையும் அவள் தாயையும் ஒன்றாகப் பிணிக்கும் ஒளிரேகை அவளுக்குத் தெரிந்ததாம்.

### வேண்டாத குழந்தை

"தாய் தந்தையர் வேண்டாம் என்று நினைத்த பொழுது பிறக்கும் குழந்தைகளைப் பற்றி முக்கியமான உண்மை ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. அம்மாதிரியான குழந்தைகளுக்கு, இந்த ஒளிரேகைக்குப் பதிலாக கருப்பு மேகம் போல் தெரிகிறது. கருவிலிருக்கும் குழந்தை, தான் வேண்டப்படாதது என்று அறிந்து கொண்டு எப்பொழுதும் அழுது கொண்டே இருக்கிறது. இம்மாதிரியான குழந்தைகளைப் பரீட்சிக்கப் படும் பொழுது, உலகமே இருளாகவும் குளிர் நடுக்கும்படியாகவும் இருக்கின்றது என்று சொல்லுகிறார்கள்."

பிறகும் ஆராய்ச்சி செய்ததில் அந்தப் பெண் முன் பிறவியில் சுக்கிரமண்டலத்தில் வசித்ததாகக் கண்டு பிடித்தார்கள்.

---

கொண்டும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் 25 வயது மதிக்கத் தகுந்த பால்ய சந்நியாசி யொருவர் ராமநாதன் வீட்டு வாயிலில் வந்து நின்றார். அவ்வீட்டின் திண்ணையில் கிழவரொருவர் உட்கார்ந்திருந்தார். அக்கிழவர் அச்சந்நியாசியைப் பார்த்து 'ஐயா, இந்த ஊரில் 20 வருஷத்துக்கு முன் யாராவது சங்கரன் கோவிலிலிருந்து பெண் கண்டெடுத்து வந்தார்களா? அப்பெண்ணை நான் சங்கரன் கோவிலில் பிரிந்துவிட்டேன். அவள் என் பெண். ஆனால் உமக்கு எங்கே தெரியப்போகிறது' என்று வருத்தத்துடன் சொன்னார். சந்நியாசி 'இந்த வீட்டில் கேட்போம்' என்று கிழவரையும் அழைத்துக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தான். 'அம்மணி' என்று கூப்பிட்டவுடன் ஸரோஜா வந்தாள். சரோஜாவிடம் சந்நியாசி 'அம்மணி இந்த ஊரில் 16 வருஷங்களுக்கு முன் ஒரு பெண்ணைச் சங்கரன் கோவிலிலிருந்து கொண்டு வந்தார்களா? அவளுக்குக் கலியாணமாகி யிருந்தது. அவள் கணவன் பெயர் ராஜாமணி. அவன் நான்தான். அவள் இங்கேதான் கொண்டுவரப் பட்டாள் என்று தப்புத் தெரிந்து வந்தேன். 'தங்களுக்கு ஏதாவது தெரியுமா?' என்றான். ஸரோஜா 'ஆ' என்றலறிய வண்ணம் கீழே விழுந்துவிட்டாள். இவ்வளவிற்கும் கிழவர் திக்பிரமை யடைந்து நின்றார். அப்பொழுது சந்நியாசி தனது தாடி மீசைகளை பிய்த்து எறிந்துவிட்டான். ஸரோஜாவின் தலையை மடிமீது எடுத்து வைத்துக்கொண்டு. 'ஸரோஜா! கண்ணை விழித்துப்பார். நான்தான், ராமநாதன். உன்னிடம் ஒரு விளையாட்டு விளையாடலாமென்று வந்தேன். இதோ உன் தகப்பனாரும் வந்து சேர்ந்திருக்கிறார்' என்று சொன்னதும் ஸரோஜா விழித்துப் பார்த்தாள். தான் தனது கணவன் ராமநாதன் மடிமீது படுத்திருப்பதைப் பார்த்தாள்.



30-11-34-ந் தேதி புதுக்கோட்டை மகாராஜா கல்லூரியின் பொன் விழா நடைபெற்றபோது, அதனை நிர்வாகஸ்தர் திரு. அலக்ஜாண்டர் டாட்டன்ஹாம் திறந்துவைத்தார். —Pon.



1-11-34-ந் தேதி செங்காடு கிராமத்தில் காலஞ்சென்ற எஸ். ஜி. கிட்டப்பாவின் வருஷாப்திக தினத்தைக் கொண்டாடிய போது ஏராளமான ஆதித்திராவிடர்கட்கு உணவு வழங்கினர்.



ஸ்வீடனிலிருக்கும் ஸ்டாக்ஹோம் என்ற நகரத்தின் ஒரு வீதி. —N. I. A.



காட்டு மராட்டிப் பெண்களின் நடனம். —P. T. Murthi.





திரு. ராம. அருணசலம், திரு. செல்லப்பா ராமசாமி ஆகியோர் தம் துணைவியர்களுடன் கும்பகோ விஜயம் செய்தபோது எடுத்த படம்.



காட்டு மராட்டிகளின் குடிசைகள். அவர்களது பொதிமாடு நிற்பதைக் காண்க. —P. T. Murthi.




சென்ற வாரம் நிகழ்ந்த புதுக்கோட்டை மகாராஜா காலேஜின் பொன் விழாவின்போது நடைபெற்ற மாறுவேடப் போட்டி. இடது பக்கமிருந்து 4-வதாக நிற்கும் ஜி. வெங்கடராமனென்ற மாணவனுக்கு முதற் பரிசு கிடைத்தது. —Pon.




17-11-34-ந் தேதி திருவாளர்கள் ராம. அருணசலம் தம்பதிகளும், செல்லப்பா-ராமசாமி தம்பதிகளும் சும்பியோ சென்றபோது, படகில் நண்பர்கள் சென்று வரவேற்றார்கள்.



தொடர் கதை

# ஒரு சுப்ரமணியரின் சுய சரிதை

(இ. சிவம்)

(சென்ற வாரத் தொடர்ச்சி)

கயற்கண்ணி சுந்தரமூர்த்தி ஆகிய காதலர் இருவரும்—என் வயிறெரிய—ஒன்றிரண்டு முறை பார்த்தனர். அதாவது அவர்கள் கண்களிரண்டும் ஒன்றையொன்று அணைத்தன!

இந்தத் தனி நிகழ்ச்சியினிடையே, என் அன்பான வாசகர்களே! அங் கயற்கண்ணி—என் பிற்புறம் பதுங்கியவள்—எழுந்திருந்தாள் என்று கூற வேண்டுமா? சுந்தரன் மீது ஊறிக் கொப்பளித்து வரும் ஆசை, மனதிற்குள் நிரம்பிக் கிடக்கையில், அவள் எவ்வாறு உட்காருவாள்; பதுங்குவாள்? மெல்ல—எவ்விதமோ என்னால் வர்ணிக்க முடியாது; என் வர்ணனா சக்தியைக் கம்பனும் பிறரும் கவர்ந்துக் கொண்டார்கள்—மெல்ல அங்கயற்கண்ணி எழுந்திருந்து ஒருபுறமாக ஒதுங்கி மறைந்தாள். மறைந்தாளென்றால் அவள் உடலம் மறைந்ததென்றே வாசகர்கள் கொள்ளவேண்டும். மற்றப்படி அவளுடைய திரு உருவம் சுந்தரன் நேத்திர ரங்கத்திலும்; சுந்தரனின் செவ்விய தமிழுருவம் கயற்கண்ணியின் நயனங்களிலும் நிழற்றாமலில்லை. இவ்வாறு இருவர்—இரு காதலர்—இளம்பிராயத்தினர்—உலக சுகமென்னும் செழுந்தீங் கனியின் ஒரு அணுவையேனும் நுகராதவர்கள்—இரண்டிடங்களில்—தனியாக நின்று கொண்டிருந்தால் எப்படியிருக்கும்!—நான் பாரிஸ் லேடிகள் ஸ்நானம் செய்யும் சினிமாப் படத்தைப் பார்க்கும் ஆடவனைப்போல் 'திறுதிறு' என்று விழித்துக் கொண்டிருந்தேன். என் முன் அவர்களின் மௌனப் படக்காட்சி மானசீகமாகவும், அந்தரங்கமாகவும், ஆன்மார்த்தமாகவும் நடந்தது.

நெடுநேரத்தின் பின், அம்மௌனப் படம் டாக்கி ஆக மாறிற்று—அதாவது சுந்தரமூர்த்தி மிகமிகத் துணிச்சல்கொண்டு, தொண்டையைக் கனைத்துச் செப்பனிட்டுக்கொண்டு, விலவிலத்தமாதிரியில், "கயற்கண்ணி, நீ தனியாக இங்கிருந்து வாடுவாயென்றெண்ணியே துணைக்கு வந்தேன்.... ...........மழை நிற்கும் நேரமாகிவிட்டது. பயத்தை யொழிக்கலாம். இன்னும் சற்றுநேரத்தில் எப்படியாவது வாயிலைத் திறக்கிறேன். சுகமாக நாம் வெளியே செல்வோம். நாழிகை சற்றேறக்குறைய எட்டு இருக்கும்........ ................" என்று கூறிமுடித்தான். அன்பர்காள்! இந்தப்பேச்சில் ஏதேனும் ரசமிருக்கிறதா? பேதை! சுந்தரன்! அவனுக்குப் பேசவேண்டுவது வேறு மலைமலையாயிருக்கின்றது. ஆனால் பாவம்! வெட்கத்தாலோ கோழைத்தனத்தாலோ எதையோ நினைத்து எதையோ பேசுகிறான்.

சுந்தரன் சொல்லிய சொற்களுக்கு கயற்கண்ணி யாதும் பதில் கூறவில்லை.

'கயற்கண்ணி' என்று அவ்விளைஞன் துணிச்சலோடு சொன்னசொல், ஆம்—அவன் வாழ்க்கையில் அதுதான் முதன் முறை!—ஒப்பற்ற அழகுக் குவியலாகிய—என் காதல் குவியலுமாவாளன்றோ?—அவ்விளம் காதலியின் செவிகளில் அவன் சொன்ன 'கயற்கண்ணி' என்ற விளிவேற்றுமை நுழைந்ததும்—இல்லை திடீரென்று விழுந்ததும்—'மின்சார ஏறு'(Electric Shock) ஏற்றாற்போல ஒரு முறை நடுங்கினாள்! உடம்பு முழுதும் மயிர்க்குச்செறிய வியர்வைத்துளிகள் முளைத்தன. இருதயம் 110 டிக்ரி ஜுரம் கண்டவர் இருதயம் போல் துடிக்க, குழப்பத்தில்; குழைந்த இன்பத்தை அடைந்தாள். நெடுநேரம் அவள்காதில் கயற்கண்ணி என்றவோசை சுழன்று சுழன்று ஒலித்துக் கொண்டிருந்தது. அப்போது அவளைத் தட்டி எழுப்பி "பாவாய்! சுந்தரன் என்ன சொன்னான் உன்னிடம்?" என்று கேட்டிருந்தால் நிச்சயமாகவும் "ஒன்றும் தெரியாது" என்ற பதிலையே கூறியிருப்பாள்—ஆம்! காதலில் சிக்குண்டு தம் துணைவரை முதலில் சந்தித்தால் இப்படித்தான் இருக்கும். மக்காள்! இஃதன்றோ உண்மை யின்பம்! இதனை யன்றி உலகில் வேறென்ன சுகமிருக்கின்றது?

சுந்தரன் மேற் குறித்தவாறு கூறியதும், கயற்கண்ணி ஒரு பெரு மூச்சு விட்டதை யன்றிச் சற்றும் அசையவில்லை. அது கண்டு அவன் மேற்படிக் கூற்றை இரண்டு மூன்று முறை திருப்பித் திருப்பிக் கூறியிருப்பான் போலிருக்கிறது. எனினும் அவள் அசைந்ததாக எனக்கு ஞாபகமில்லை.

ஆகவே "செல்வி! என்னைக் கண்டு பயப்படுகின்றாயோ! நான் திருடனன்று. பகைவனன்று. யாதும் தீமை நினைப்பவனுமன்று. உனக்காக ஒரு வருடமாய் வாடித் தவித்து நிற்கும் ஏழை என்பது இக் கடவுளறிய நீ உணர்வாய்! உனக்கு என் உயிருள்ளளவும்—என் உடம்பில் ஒரு துளி ரத்தம் இருக்கும் அளவும்—எத்தகைய தீமையும் நேர்ந்து விடாது. உனக்கு ஊறு ஏற்பட்ட பின் இந்தச் சரீரம் இருந்து

எதற்கு? கயற்கண்ணி! ஏந்திழாய்! அஞ்சாது இங்குவா! நான் உன்னைப் பாதுகாக்கவே இவ்வமோக மழையில் இங்கு வந்தேன்" என்று கூறினன். அதற்கு அவள் இலேசாக—இலேசாக என்றால் சுந்தரன் அறிவானே என்னவோ—மிக லேசாகத் தன் கடைக்கண்களால் அவனைப் பார்த்தாள்.—ஆ! அவன் வாய் பேசினும் இருதயம் ஒத்திணையவில்லை! வீரம் மலிந்தாலும் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. கண் பார்த்தாலும் நீர் மல்கியிருந்தது. ஏதோ கொலை பாதகத்துக்குத் துணிந்தவன் போல் இயங்கிக் கொண்டிருந்தான் சுந்தரன்! இந்தத் தோற்றத்தில் வாசகர்காள்! ஏன் கயற்கண்ணி யோர் ஆநந்தத்தை யெய்தி இருக்கமாட்டாள்?

சுந்தரன் இரண்டு மூன்று முறை கயற்கண்ணி என்ற அந்தத் திருநாமத்தை உச்சரித்து நாத் தழும்பேறியதும் சற்றுத் தைரியம் கொண்டு, என் திருக்கோவிலுக்குள் நுழைந்து, "என்கயலே! ஏன் என்னிடம் பேசமாட்டேனென்கின்றாய்!" என்று மொழிந்த வண்ணம் அக்கோமளாங்கியின் 'திரு'க்கரத்தைப் பற்றி வெளியே இழுத்தான்! ஆ! எவ்வளவு ஆநந்தக் காட்சி!

சுந்தரன் கையைப் பற்றியதும் அவள் உடம்பில் ஏற்பட்டது மற்றொரு 'மின்சாரம்' ஏறு! அவள் யாதும் பேசாது, மிக மிக மிகக் குழம்பிய சிந்தையுடன், குழைந்த உடம்புடன், குழறிய மனத்துடன் சாய்ந்தாள். அவன் மெதுவாக இழுத்ததே யன்றி—கயற்கண்ணியை திருக்கோவில் வாயிற்படியில் உட்கார வைத்துத் தானும் பக்கத்தில் உட்கார்ந்தான். பின் அவளது கோமள முகத்தை கண்கள் நோக்கின. ஆம்—சந்திரனிடமிருந்து பல் கோடிக் கிரணங்கள் பூமியை நோக்கிப் பாய்வது போல், நாணம், சம்மதம், அழகு, குழப்பம், ஆநந்தமாகிய பஞ்சவர்ணங்கள் கலந்த பல்கோடி வசீகரக் கிரணங்கள் கயற்கண்ணியின் முகத்திலிருந்து உற்பவித்து, அவனது முகமாகிய பூமியில் பாய்ந்தன. அதனைப் பார்த்துக்கொண்டு எப்படியிருக்க முடியும்? காந்தம் இழுத்தால் இரும்பு அசையாதிருக்குமோ? சுந்தரனின் முகம் கயற் கண்ணியின் முகத்தை அண்மியது. இதழ்கள் கூடின; ............கூடின..........கூடின! கூடினவென்றால் எவ்வளவு நேரம்? இருவரும் நித்யானந்த நெடுஞ் சுகத்தில் நீந்திக் களித்து நின்று விட்டனர். சுமார் ஒரு வருடமாக இருவரும் தத்தளித்து ஏங்கித் தவித்திருந்த எண்ணத்தைச் சாதித்துச் 'சீல்' போட்டுக் கொண்டதோடு, அவ்வளவு காலம் தாமதமானதற்குப் பிராயச்சித்தமும் அம் முத்தத்திலேயே செய்து கொண்டார்கள்.

வாசகர்களே! என்னைக் குறைகூறலாகாது. ஆங்கில சினிமாவைப் பார்த்தால் உங்கட்கு எவ்வளவு வெறிவரும்? அவ்வளவும்—அதை விட அதிகமும்—வெறி வந்தது எனக்கு. அதனைக் காணக்காண வள்ளி "குழந்தைகள்! புதிதாகச் சந்திப்பவர்கள்! இப்படித் தானிருப்பர்" என்று வேதாந்தம் பேசினள். அன்று, நாங்கள் காட்டில் சந்தித்ததும், அவள் காட்டிய பாசாங்கும் மறந்துபோய் விட்டன அக்கள்ளிக்கு!

மேற்குறித்த நீண்ட முத்தம் முடிந்ததும், கயற்கண்ணி தூக்கத்தினின்று எழுந்தவள்போல "தந்தை தேடுவார். நான் வீட்டுக்குச் செல்லவேண்டும்" என்றாள்.

சுந்தரன் :—நான் யாவும் அறிவேன். வண்டிக்காரனை வழியில் போகவிட்டு விட்டு, நீ தனிமையாக இங்கு வந்ததை அறிந்தேதான் நான் ஓடி வந்தேன்.

கயற்கண்ணியின் முகமதி புன்னகையென்னும் பூ நிலாவை எறித்தது.

சுந்தரன் :—அப்பால் மழையில் நீ தனிமையாக இருப்பாய் என்ற வருத்தம்தான் மதிலை எழுப்பி என்னை இங்கே கொணர்ந்தது.

கயற்கண்ணி :—நேரமாகி விட்டால் ...........என் தந்தை...........என்ன?

சுந்தரன் :—ஆம்........நான் உன்னை ஊருக்கு அழைத்துச் செல்கின்றேன். ஆனால்...........கயற்கண்ணி இனி எப்போது சந்திப்போம்?...........

கயற்கண்ணி யாதும் பேசவில்லை.

சுந்தரன் :—என் மீனு! நீ யாதும் சொல்கின்றாயில்லை. நமக்கு அதிக நேரமிருக்க அவகாசம் கிடையாது; சீக்கிரம் போய்விட வேண்டும். உன் கருத்தை நீ தெரிவிக்கவில்லை. உன் தந்தையார் உன் திருமணம்பற்றி வேறு பேசுவதாகக் கேள்வி. திருக்குறுங்குடிப் பாண்டியன் வம்சத்தோடு கலாவேண்டுமென்பது அவரது ஆசை. பெருமடை கருவேல பாண்டியன் புதல்வனையும் கருதுவதாகக் கேள்விப்படுகிறேன். அத்தகைய சர்பந்தம் இனிப்பாக உன் தந்தைக்குத் தோற்றுமானால் கயற்கண்ணி! என் கதி யென்னாகும்?

கயற்கண்ணி நெடுநேரம் யோசித்தாள்........அவள் மனம் பல உலகங்களைச் சுற்றி வந்தது.

அப்பால் அவள் :—என் கருத்தறியாது யாதும் செய்யமாட்டார் என் தந்தை. என்மீது காண்பித்துவரும் பேரன்பு அவ்வாறு செய்யத் தூண்டாது அவரை.

சுந்தரன் :—ஒருகால் பாண்டிய மன்னன் தலையீடு நிமித்தம் மனம் மாற ஏதுவானால்!

கயற்கண்ணி:—மணத்திற்கு உடந்தையாக வேண்டியவள் நானன்றோ?

சுந்தரன் :—தந்தை வற்புறுத்தினால் நீ என்ன செய்யமுடியும்?

கயற்கண்ணி :—(நாணிக்குழைந்த நிலைமையில்) மனமில்லாது வெறும் உடம்பை மணம் செய்வது இந்தப் பூமியிலுண்டோ?

சுந்தரன் :—எழிலே! இன்று பாண்டிய தேசம் ஒரு நெருக்கடியான நிலைமையிலிருக்கின்றதென்பதை நீ அறியமாட்டாய்! பெரிய பெரிய அரசியல் வாதிகள் கலங்கிக் கொண்டிருக்கின்றனர். சமீபத்தில் சேரநாட்டுச் சிற்றரசர்கட்கும் பாண்டியநாட்டு அதிபர்கட்கும் போர் நிகழலாம். அவ்வாறு ஏதாவது அசந்தர்ப்பங்கள் காணப்படுமாயின் உன் தந்தை புத்திர வாஞ்சையையும் பிறவற்றையும் துறந்துவிடக் கூடுமென்று நினைக்கின்றேன். அப்போது மங்காய்! நீ என் செய்வாயோ வென என் மனம் ஏங்குகின்றது...........இம் முருகபிரான் அறிய நான் உனக்காக நித்தம் நித்தம் வாடிக் கலங்குகின்றேன். நீ எனக்காறுதலளியாது போனால் என் கதி என்னாகுமென்று கூற ஏலாது. என் எரியும் மனமும், தவிக்கும் ஆசையும், வேகும் எண்ணமும் சாந்தியடைய வேண்டுமெனில் உன்னுடைய திண்மையான வாக்கு வேண்டும். ஆண்டவன் அறிய அவன் சன்னிதியில் கூறுகிறேன்: நீ என்னை விட்டு நீங்கமாட்டாயென்று என்னிடம் முருகபிரானின் முன் உறுதி தரவேண்டும். இந்தச் சொல் நீ அறம் வழுவுவாயென்று நினைத்துக் கூறப்படுவதன்று: என் காயும் மனத்திற்குச்சாந்தி வேண்டு மென்பதற்கே வேண்டுகோள்!



என்றிவ்வாறு கூறிக் கொண்டே அங்கயற்கண்ணியின் செவ்விய கரங்களை எடுத்துத் தன் வலக்கைமீது வைத்தான். பஞ்சனை துயிலும் ரோஜா மலர் தன் கைமீது வந்துற்றாற் போன்றிருந்தது சுந்தரனுக்கு. இந்தச் செயலையும், சுந்தரனின் இருதயத்தைப் பிளந்து வார்த்தை வடிவமாக வெளிப்பாயும் உணர்ச்சியையும் கண்ட கயற்கண்ணி தன் திருக்கரத்தை எடுத்து மீண்டுமழுத்தி "என் இருதயமிருந்த இடமே என் வாழ்வு. தந்தை என் விழைவைத் தவறவிட மாட்டார்........ ........அன்றியும் இம் முருகபிரான் வருடமொன்றாக நாம் அறிந்தோ அறியாமலோ காண்பித்துக் கொண்ட எழுச்சியைப் பார்த்திருந்தும் வஞ்சம் செய்வாரோ" என்றாள். இவ்வார்த்தைகள்




சுந்தரனின் அந்தரங்கத்தில் பாய்ந்தன. எனவே மனம் பூரித்து, அதுகாறும் சலிப்புற்றிருந்த சிந்தையைத் திடப்படுத்திக்கொண்டு, தன் உறுதிக் காதலியாகிவிட்ட கயற்கண்ணியை மீண்டுமொருமுறை முத்தமிட்டான். அப்பால் இருவரும் என்முன் நின்று வணங்கினர். தங்கள் தங்கள் இருதயத்தில் கூத்தாடிய எண்ணங்கள் பழுதற முடிவுற வேண்டுமென்று தியானித்தனர்.

பின் சித்திரபுரம் அடையும் எண்ணம் முதன்மை பெற்றதால் இருவரும் பிராகாரமதிலை நோக்கி நடந்தனர். ஆம்—எவ்வளவு பொருத்தம்! வள்ளிநாயகி என் துடையில் மெல்லக் கிள்ளிக் கொண்டு "பார்த்தீர்களா! எவ்வளவு பொருத்தம். இருவரும் நெருங்கி நடப்பது எவ்வளவு அழகாக இருக்கின்றது. பாவி! சோதிடர்கள்! சிலகால் இப்படிப்பட்ட காதலர்கட்கும் கூடப் பொருத்தமில்லை என்று கூறிவிடுகின்றனர்!" என்றாள்.

சுமார் 5 நிமிஷம் சென்றிருக்கலாம். சுந்தரன் பன்னிரண்டு பதினைந்து அடி உயரமான பெரிய கதவின் தாழ்ப்பாளை ஒரு இழுப்பு இழுத்தான். இரண்டு கம்பிகள் சடாரென்று முறிந்துவிழ, வாயில் திறந்தது. மழையும் முற்றிலும் நின்றுவிட்டது. காதலர் இருவரும் வெளியே சென்று வாயிலை மூடினர்கள்.

## III

"ஆங்கு ஊர்வார் யாரோ கொல்"
"நான்தான்—அங்கயற்கண்ணி".

"ஏ! வஞ்சம் உணராப் பேதாய்! நள்ளிருட்கண் யாங்கு செல்லுதி!"

"திருக்குறுங்குடியி லிருந்து வருகின்றேன்."

"செல்வி! தனிநெறி படர்ந்து இயங்குதற்கு ஏது எதுவேயோ?"

கயற்கண்ணி குழம்பினள். வீடு சேரு முன்பு வழியில் தன்னாசிரியனிடம் சிக்கிக் கொண்டோமே என்று சாலவும் கலங்கினள்.

அவளிடம் பேசிக் கொண்டிருந்தவர் தமிழ் மாறனென்ற பண்டிதராவர். அவர் கடந்த சில வருடங்களாகச் சித்திரபுரத்தில் தொண்டைமானின் (கயற்கண்ணியின் தந்தை) ஆதரவில் இருந்து வருகிறார். சங்க இலக்கியங்களிலும் தமிழ் ஆராய்ச்சியிலும் தேர்ச்சியுற்ற அவர் தன் அறிவால் தொண்டைமானுக்கு வியப்பை உண்டுபண்ணியதால் அந்தவூரில் வதிய இடமேற்பட்டது. கயற்கண்ணியின் ஆசிரியராக இருந்தவர் அவரேயாம். தொண்டைமான் எவ்வளவு கயற்கண்ணியை நேசித்து வந்தாரோ, அவ்வளவு இவ்வாசிரியரும் (தமிழ் மாறனும்) அவளை அபிமானித்து வந்தார். கயற்கண்ணிக்கு இருவரிடமும் சமமான பயமும் வாஞ்சையுமுண்டு.

தமிழ்மாறன், மாலையில் சித்திரகிரியண்டைவந்த கயற்கண்ணி, வீட்டுக்கு வரவில்லை என்று கேள்விப்பட்டதால் நெடுநேரமாக எங்கும் தேடிக் கொண்டிருந்தார். அவ்வாறே தொண்டைமானும் தேடியதாகக் கேள்வி. தமிழ்மாறன், கபடமறியாத கயற்கண்ணி மழைக்குப் பயந்து எங்காவது ஒதுங்கிக் கொண்டிருக்கலாம் என்று எண்ணி இருந்தாராம். அந்த நிலைமையில் ஊருக்கு வெளியே அவளைக் கண்டுவிட்ட தமிழ்மாறனுக்கு 'இப்போது தான் வருகின்றே'னென்ற சொல் பெரிதும் சந்தேகத்தைக் கொடுத்துவிட்டது. அவள் 'நான் மழைக்கொதுங்கி இருந்துவிட்டு வருகின்றே'னென்று கூறியிருந்தால் சரியாகி யிருந்திருக்கும். கபடமறியாத ஏந்திழை! பாவம்! ஆசிரியரிடம் சிக்கிக் கொண்டாள்.

ஆசிரியர்:—பாவையே! பொய் புகலற்க! அந்திப்போழ்து சகடமூர்ந்த சாரதியும் நீயும் வந்தீரல்லிரோ? அம் மாற்றம் யாம் உணர்ந்திருந்தும் அவச்

சொல் அறைதல் நோக்கின் இதயம்
அவலம் மல்குமே.

கயற்கண்ணி "ஆ ஆ! உண்மை தெரிந்துவிட்டதே. எப்படித் தப்புவது?" என்று புரியாது குழம்பினாள். பூமியை நோக்கிய வண்ணம்—தன் முன்தானையின் ஒரு நுனியைப்பற்றி அதனைப் பார்த்தவண்ணம்—தலை குனிந்தாள். உடம்பில் வியர்வை துளிர்க்க மனம் படபடத்தது.

ஆசிரியர்:— கயற்கண்ணி! பேதமையை ஏற்றிடுக. மெய்மையை சாற்றலே சாலும். எம்மினோர் வையங்கண்டறலே வாழ்வினர். நெறியில் நிற்றலே நேர்மை அறம் என்றுணர்தி. யாங்குற்றனையோ கொல்.....................?

நீளமாகச் சிந்தித்தாள். பால்போலும் தெளிந்த கயற்கண்ணிக்கு, மேலும் பொய்பேசித் தன் செயலை மறைக்க மனம் வரவில்லை. அன்றியும் என்றைக்காயினும் தன் ஆசையைக் கூறியே ஆகவேண்டுமன்றோ? அதிலும் ஆசிரியரிடம் கூறுவது தந்தை தாயாரிடத்தில் கூறுவதைவிட எளிதன்றோ? எனவே நெடுநேர மௌனத்தின் பின் "வண்டிக்காரனை அனுப்பிவிட்டு முருகனாலயம் சென்றேன். மழை கொட்டிற்று. அதற்காகப் பதுங்கி இருந்தேன். அது தெரியாத அர்ச்சகன் ஆலய வாயிலைப் பூட்டிவிட்டான். ஆகவே நான் தனிமையாக இருளில் சிக்கிக்கொண்டேன்,—அப்பால்........" என்றாள்.

ஆசிரியர் :—பேதாய்! பிதற்றுதல் என் கொல்? சித்தம் திறந்து சிந்துதி. அறநெறி படர்ந்தி, அனையின் நிற்றல், ஆவதோ, அருளோ, அஞ்செயலோ?

கயற்கண்ணி :—அங்கேயே இருக்க —ஒருவர்—ஒரு இளைஞர்...........

ஆசிரியர் :—(வியப்புக்கொண்டு) ஆ! ஆ! நெறி தவறினையோ..........நின்றனை! அவலம்! அவலம்........!

கயற்கண்ணி:—நெறிதவறவில்லை. அவ்விளைஞன் என்னை வெளியே விட்டார்.

ஆசிரியர் :—கள்ளிருட் பிழம்பினில்
நலஞ்செறி இளைஞன்........எனின்,

யாங்ஙனம் எம்மினோர் ஏற்பதென்
[றறிவையோ,

தொண்டைமான் சோதிசுடர் தரும்
[சீமையின்

நின்னெறி தவறிடின் நீணிலம்
[வாழ்வதோ?

என்று சினந்தார்; அவர் உதடுகள் துடிதுடித்தன.

எனவே நடுநடுங்கிய கயற்கண்ணி :—வந்தவன் தீயனல்லன். எனக்கு நலஞ் செய்பவனே. என் மனத்திற்கு மாறாக எதுவும் நடக்கவில்லை,

ஆசிரியர் திகைத்தார். "யாது செப்புகின்றனை?

நின் மனமிசையா நெறியெது மில்லை
[யென்

றென்முனம் இசைத்திட ஏற்றனை
[வன்மனம்?

கயற்கண்ணி :—எனக் கறிமுகமானவரே, நான் நிராதரவாய் ஆலயத்திலிருப்பதைத் தெரிந்து என்னைக் காப்பாற்ற வந்தார்.

ஆசிரியர்:—தீயறி நெறியினன்! அன்னவன் (தலையசைத்து) அபிதானம் செப்புதியோ?

கயற்கண்ணி :—சுந்தரன்........

ஆசிரியன் :—ஆ! ஆ! சுந்தரப் பெயரினன்...........

களக்காடுற்ற கார்காண் முதலி,

களத்தில் வெறிகொள் காளை முனை!
சுந்தரன்..........அன்னோனின்
வயப்பட்டனை பேதை! அவனுன்
அறிமுகம் ஆனவெனென என்
முன் அறைகுவை?

கயற்கண்ணி பூமியை நோக்கிய வண்ணமே குழைந்து நின்றாள். ஆசிரியர் தம் மனதில் என்னென்ன நடந்திருக்கக் கூடுமென்றும், வண்டிக்காரனை வழியில் போகவிட்டு வளர்குன்றேறி வணங்கி வந்ததின் கருத்தென்ன வென்றும் யூகித்தார். எனவே அவர் சற்று நிதானித்து விட்டு, "கயற்கண்ணி! சுந்தரன்பால் வெம்மனம் நாட்டி சென்றனவோ வாரம் பல?" என்று வினவினர்.

கயற் கண்ணி பதிலிறுக்கவில்லை.

ஆசிரியர்:—மௌனமென் கொல்? உளத்திடைபூத்த தொன்றும் மறையற்க!

கயற்கண்ணி யோசித்தாள். இத்தனை சொன்ன பிறகும் மறைப்பதென்றால் பொருளுண்டென்று தோன்றவில்லை. ஆகவே "சுமார் ஆறு மாதமாக" என்றாள்.

ஆசிரியர்:—திங்களாறு சென்ற பின்னும், சேரு மாற்றல் பெற்றதின்றோ?

கயற்கண்ணி:—இன்று தான் வாய்விட்டு மட்டிலும் பேசினோம்.

"கொடிது கொடிது" என்று புலம்பியவாறி ஆசிரியர் முன்நடந்தார். கயற்கண்ணி பின் தொடர்ந்தாள். சுமார் ஒரு பர்லாங் சென்றதும் தமிழ் மாறன்படியேற, கயற்கண்ணி அடிவைக்க இருவரும் தொண்டைமான் இல்லம் புகுந்தனர். ஆம்—அவர்களைக் கண்டதும் தவித்து ஏங்கி இருந்த தாய் தந்தையர் ஓடி வந்து 'செல்வம்! எங்க போனாய் இவ்வளவு நேரம்" என்றார்கள். கயற்கண்ணி மனம் மாறிவிட்டதல்லவா? பொய் சொல்ல முடியாமலும் உண்மை பேச இயலாமலும் தத்தளித்தாள். சுருங்கச் சொன்னால் அவள் முகமே முன் போல் இல்லை. ஆனால் கலங்கியிருந்த பெற்றோர்—தம் புதல்வியின் ஒவ்வொரு அணுவையும் நேசித்து வந்த தொண்டைமான் தம்பதிகள்—விகற்பமாக நினைக்கவில்லை தம் புதல்வி உடன் பதிலிறுக்காததை நெடு நேரம் கலங்கியிருந்திருந்ததினால் வருத்த முற்றுத் மௌன முறுகின்றாளென்று நினைத்துக் கொண்டார்கள். அதனைத் தெரிந்து கொண்டபுலவர் தமிழ் மாறன்,

"மழை வாய் வீழ்ந்து மயங்கிய எது
[வான்

உழையோர் பாலுற் றுயங்கனள்
[ஆகையான்

பிந்தி வந்தது பேச அறியாப்

புந்தியின் விழிக்குநள் பொற்கொடி!

கண்டனம் ஓர் பால் கடுகி அழைத்துக்

கொண்டனம் எம்மரும் தோகைக்
[கண்ணியை" என்றார்.

கயற் கண்ணி தம் ஆசிரியர் இரகசியமெதையும் கூறாது மறைத்ததை அறிந்து மிகவும் சந்தோஷ மெய்தினாள்.

(தொடரும்)

காதலே உயிர்!



## கீழச்சிவற்பட்டி (அழகாபுரி)

### தனவைசிய சங்கம்

இச்சங்கத்தின் நிர்வாகிகள் தேர்தல் கூட்டம் உயர்திரு. எ. நா. காசி விஸ்வநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் M. S கலாசாலைக் கட்டிடத்தில் 5-12-34-ந் தேதி கூடிற்று. அடியில் கண்டவர்கள் நிர்வாக சபையாராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களால் சங்கத்தின் அறிக்கைகள் வாசிக்கப்பட்டதும் இவ்வூரில் நடைபெற்ற தனவணிக இளைஞர் உடற்பயிற்சி மகாநாட்டில் வெற்றிபெற்ற திரு. பெரி. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களைப் பாராட்டி பொற்பதக்கம் ஒன்று அளித்துத் தேனீர் விருந்து கொடுக்கப்பட்டது. பின் ஸ்ரீமான் லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள், ஸ்ரீமான் சுப்பிரமணிய அய்யரவர்கள், ஸ்ரீமான் சங்கரநாராயண அய்யரவர்கள், ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி அய்யரவர்கள் முதலியோரால் சங்கத்தின் அவசியம், கல்வியின் அவசியம், உடற்பயிற்சியின் அவசியம், என்ற விஷடங்கள் வெகு அழகாகப் பேசி முடிந்ததும் தலைவரவர்களின் பின்னுரைக்குப் பின் வந்தனோபசாரம் கூறப்பட்டு சந்தன தாம்பூலம் வழங்கிக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

#### சங்க நிர்வாகசபையார்கள்

அ. அள. சொக்கலிங்கஞ் செட்டியார் (தலைவர்).

ராம. சிதம்பரஞ் செட்டியார் (உபதலைவர்).

அ. பழ. சுப்பிரமணியன் செட்டியார் (காரியதரிசி).

சொ. பழநியப்ப செட்டியார் (உபகாரியதரிசி).

அ. கரு. சொ. சொக்கலிங்கஞ் செட்டியார் (பொக்கிஷதார்).

செ. ப. மு. சுப்பய்யா செட்டியார் (கணக்குப் பரிசோதகர்).

சுப. பழ. பழநியப்ப செட்டியார் (பாட்மிண்டன் காரியதரிசி).

#### அங்கத்தினர்கள்

சு. அ. சு. சுப்பிரமணியன் செட்டியார்.



லெ. சோமசுந்தரஞ் செட்டியார்.

ராம. மு. ராம. அழகப்ப செட்டியார்.

செ. வெ. ராம. வெள்ளையப்ப செட்டியார்.

வீர. அரு. சி. சின்னக்கருப்பஞ் செட்டியார்.

வீர. வள்ளியப்ப செட்டியார்.

நா. கி. கி. கிருஷ்ணப்ப செட்டியார்.

மேற்படி சங்கத்திற்கு சு. அ. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் ரூ. 50-ம் லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் தமிழ்நாடு, ஊழியன் வாரப் பதிப்புப் பத்திரிகைகளையும் அ. பழ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் ஆனந்த விகடன், தனவணிகன், சுதந்தரன் வாரப் பதிப்புப் பத்திரிகைகளையும் கெடிகாரம் ஒன்றையும் புத்தகங்கள் 401-யும் சுப. மு. சண்முகஞ் செட்டியாரவர்கள் பாட்மிண்டன் நெட் ஒன்றையும் சன்மானமாகத் தந்திருக்கிறார்கள் எனக் காரியதரிசி எழுதுகிறார்.

## கீழச்சிவற்பட்டி (அழகாபுரி)

### உடற்பயிற்சிப் பிரசார சபை.

இப்பெயரால் ஓர் சபை சென்ற 5—12—34 புதன்கிழமை மாலை 5 மணிக்கு ஸ்ரீமான் எ. நா. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்களால் திறந்துவைக்கப் பெற்றது. உடற்பயிற்சி ஞானத்தையும் ஆரோக்கிய வழிகளையும் பற்றிப் போதிப்பதே இதன் நோக்கமாகும். இருபத்தொரு அங்கத்தினர்களைக் கொண்ட நிர்வாக சபையாரிடம் இதன் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. சீக்கிரமே இச்சபையார் தங்கள் வேலையைத் தொடங்குவார்கள். தமிழ்நாடெங்கணும் கூடுமானால் சென்னை ராஜதானி முழுமையும் பிரசாரம் செய்யத் தீர்மானித்துள்ளார்கள்.

—ஒரு நிருபர்.

## கடற் படையைக் குறைக்க

கடற்படை மகாநாட்டில் கலந்து கொண்ட அமெரிக்கர், பிரிட்டன், ஜப்பான் தேசங்கள் 5: 5: 3 விகிதம் தங்கள் கடற்படைகளை வைத்துக்கொள்ள வேண்டும் என்று பேசினார்கள். ஜப்பான் சம உரிமைக் கேட்டது. இதில் விவாதம் முற்றி ஜப்பான் பிரிந்து தன் கடற்படையைப் பெருக்கப்போவதாகக் கூற அமெரிக்கா, ஜப்பான் கட்டும் ஒவ்வொரு கப்பலுக்கும் 5 கப்பல் கூட்டப் போவதாகக் கூறியது. ஆனால் தற்பொழுது கடற்படை யளவைக் குறைத்துக்கொள்ள ஒப்புக் கொள்ளுவதாக அமெரிக்கப் பிரதிநிதி நார்மன் டேவிஸ் கூறுகிறார். எனவே, பிரிட்டன் இந்த விஷயமாகத் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறியிருக்கிறார்கள். அது பின்வருமாறு:—"தீவிர சக்தி பொருந்திய யுத்தத் தளவாடங்களை வைத்திருப்பதை பிரிட்டன் எப்போதுமே எதிர்த்து வந்திருக்கிறது. பெரிய யுத்தக் கப்பல்கள், விமானக் கப்பல்கள், குரூயிஸர் கப்பல்கள், அவைகளிலுள்ள பீரங்கிகளின் அளவுகள், இவற்றை 100-க்கு 30 வீதம் குறைத்துக் கொள்ளுவதை அங்கீகரிக்கப் பிரிட்டன் தயாராக இருக்கிறது."

இதை முக்கியமாக உள்ள பெரும்பாலான கடற்படை வல்லரசுகள் அங்கீகரித்திருக்கின்றன.

# தரித்திரமறியாத் தனி மனிதர்

## நாடு பல சுற்றினும் வாடுதலில்லார்

### காட்டு மராட்டிகள் கவின்தரு கதை

(P. T. மூர்த்தி)

சந்துக்குச்சந்து மூலைக்குமூலை ஊசி விற்கவரும் ஒரு கூட்டத்தாரை தமிழ் நாட்டார் பாராமலிருக்க முடியாது. வேங்கடம் முதல் குமரி முனை வரையிலும், குணகடல் முதல் குடகம் வரையிலும் எந்தப் பகுதியிலும் எந்தக் காட்டிலும் இவர்களைக் காணலாம். இவர்கள் தோன்றாத இடங்களோ புகாத காடுகளோ கிடையா! சாதாரணமாக அறுவடையாகும் காலங்களிலேயே இவர்கள் தோன்றுவர். அக்காலங்களில் கூட்டங் கூட்டமாக இவர்கள்—முதியோரும் வாலிபர்களும் குழந்தைகளும் பெண்களும் சேர்ந்து—தமது உடைமைகளை யெல்லாம் மூட்டைகளாகக் கட்டி எருதுகள்மீது போட்டுக்கொண்டு செல்வதைக் கண்டால், புதுமை நோக்கும் பொற்குண முடையார் மனம் பொங்காமற் போகாது. இந்த ஜாதியார்கள் இன்னும்—அதாவது சமதர்ம வேகம் உலகைப் பாதாதிகேசம் பற்றி அசைக்கும் இந்த இருபதாம் நூற்றாண்டிலுங் கூட—நாகரிகத்தால் உலப்பப்படாமலும் தரித்திரத்தால் கலக்கப்படாமலும் இருக்கின்றார்களென்றால் நாம் இவர்களைப் பற்றி ஆராயவேண்டுவதன்றோ? பெரும்பான்மையும் இந்த வகுப்பார்களிடையே நோயாளிகளோ தளர்ச்சியுற்றவர்களோ காணப்பட முடியாது; என்பதோடு எல்லோரும் உடலுரம் பெற்றுமிருக்கின்றார்கள்.

#### பூர்வ கதை

அவர்களுடைய உற்பத்தியைப்பற்றி ஒரு கதை சொல்லப்படுகிறது. ஒரு காலத்தில் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரு சகோதரர்கள் ராஜபுதனத்தில் வாழ்ந்து வந்தார்களாம். அவர்களில் மூத்தவன் மந்த புத்தியுடையவன்; இளையவன் நுட்ப மதியினன். இவ்விருவரும் ஒருநாள் 'மாடு மேய்த்து'க் கொண்டிருக்கையில் ஒரு மடுவின் பக்கத்தில் சென்றார்கள். ஆங்கு ராமாயண கதாநாயகியான சீதாதேவி ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். அரச பத்னியாகிய அவரைக் கண்டதும் தந்திரமாக ஒரு எருதின் பக்கத்தில் மறைந்து கொண்டான் இளைய சகோதரன். மற்றவனோ (மந்த மதியினன்) நின்ற இடத்திலேயே பதுங்கினான். ஆதலால் சீதாதேவி முதலில் மூத்தவனையும் அப்பால் இளையவனையும் கண்டு கொள்ள இடமாயிற்று. எனவே கோபம் பொங்கி இருவரையும் தென்னாட்டுக்குச்சென்று உயிர் தப்புமாறு சாபம் கொடுத்து விட்டார். இருவரும் அப்போது அழுது கலங்கி உஜ்ஜீவிக்கும் வழி கேட்டு வருந்தினராம். சீதாதேவியார் மூத்தவனைத் தன் உடைமைகளை யெல்லாம் எருதிலேற்றி ஊர் ஊராய்ச் சுற்றிப் பிழைக்கவும், இளையவனைக் காடுகட்குச் சென்று பறவைகளைப் பிடித்து உயிர் வாழவும் ஆக்ஞாபித்தாராம். அதற்காகத் தம் கூந்தலிலிருந்து சில உரோமங்களைப் பிடுங்கிக் கண்ணியாகச் செய்தும் கொடுத்தாராம். ஆதலால்தான் இவர்கள் இவ்வாறு அலைகின்றார்களென்று புராணம் சொல்லப்படுகிறது.

(இன்று சீதா தேவியின் வமிசமோ அதிகாரமோ இந்தியாவில் காணப்படுவதற்கில்லை; அவருடைய நாட்டையும் ஆங்கிலேயர்கள் ஆள்கின்றனர். எனவே இந்த மராட்டியர் இன்னும் சீதையின் ஆணையின் வழிபற்றி நிற்கவேண்டுவதின் அர்த்தம் விளங்கவில்லை. ஒருகால் பெரிய சீதா பக்தர்கள்போல ஊர் ஊராய்த் திரிகின்றனரோ என்னவோ?)

இந்த அரைக்காட்டுஜாதியாரை 'நாக்ல வண்ட்லு' என்று தெலுங்கிலும், 'காட்டு மராட்டி' என்று தமிழிலும், 'மிர்ஷிக்காரி' என்று ஹிந்தியிலும் வழங்குகின்றார்கள். சில விடங்களில் (தமிழ் நாட்டில்) குருவிக்காரர், நரிக்குறவர் என்றும் சொல்லப்படுவதுண்டு. (நாக்ல வண்ட்லு என்பதற்கு நரி பிடிப்பவர்கள் என்பதுதான் கருத்தாம்.)

'கற்றாரில் கல்லார் நனிநல்லர்' என்ற மூதுரைக்கு இவர்கள் முழுமையான எடுத்துக்காட்டு. எந்தக் காலத்திலும் இவர்கள் தொழிலில்லாக் கஷ்டத்தால் தற்கொலை செய்து கொண்டதில்லை. பொதுவுடமை தத்துவத்திற்கோ அபேதவாதத்திற்கோ இவர்களிடம் மதிப்புக் கிடையா. அன்றி காந்திஜீயின் ஹரிஜனப் பிரசாரமும், சங்கராச்சாரியாரின் எதிர்ப்பும் இவர்களை பத்து மைல் தூரத்தில்கூட நெருங்கியதில்லை. காங்கிரஸ் இவர்கட்காகப் போராட வேண்டிய வேலை கிடையாது. சுயமரியாதைக்காரர்களும் இவர்களை எண்ணி வேலை செய்யவேண்டாம். எந்த விலிங்டன் பிரபு என்ன அவசரச் சட்டம் போட்டாலும் இவர்கள் அவதியுறார். அதேபோல சீர்திருத்த அரசியலைப் பற்றியும் இவர்கட்குக் கவலையில்லை. இவர்களது முக்கியமான தொழில் பறவை வேட்டையும் நரிவேட்டையும் தான். இவர்களது லட்சியமும் சற்றேறக்குறைய அதுவேயாகும். இதனை விட்டுவிட்டு இவர்கள் இந்த உலகில் வாழவந்தாலும்........அம்மம்மா! நாகரிகம் இவர்களை எளிதில் விட்டுவிடுமா? எலக்ஷன் ஒரு பக்கத்தில் பிய்க்கும்; வறுமை ஒரு திசையில் கிள்ளும்; வேலையில்லாத் திண்டாட்டம் ஒருபுறம் தோண்டும்; வெளிநாட்டுப் பொருட்கள் ஒரு சார்பு அரிக்கும்; தீண்டாமையும் ஜாதியும் மதமும் ஒரு உழை கடிக்கும்; பணக்காரர் ஒருபால் மொய்ப்பர்; சீர்திருத்தக் காரர்கள் ஒருபுடை பிராண்டுவர். சுருங்கச் சொன்னால் உலகில் வாழுவதைவிட துறவியாவது தூய்மை என்ற எண்ணம் தோன்றிவிடும்!

#### மராட்டிகள் வேட்டை

இவர்கள் வேட்டையாடுவது மிக விசேஷம். தற்கால நாகரிகத்திற்கேற்ற துப்பாக்கிகளோ, பண்டைக்கால ஜனங்கள் உபயோகிக்கும் வில்லும் அம்புமோ



இவர்களால் உபயோகிக்கப் படுவதில்லை. சிறுசிறு குச்சுகளின் ஒரு நுனியில் மாட்டு முடி, குதிரை முடி இவற்றால் செய்யப்பெற்ற கண்ணிகளைக்கட்டி ஒரு பெரிய மூட்டை வைத்திருப்பர். அக் கண்ணிகளை தரையில் ஊன்றி, கொஞ்சம் தானியங்களை அங்கு பரப்புகின்றனர். அப்பால் பக்கத்தில் ஒதுங்கி நின்று கொண்டு பக்ஷிகளைப்போல் கூவுவர். உடன் அத்தொனியைக் கேட்கும் பறவைகள் தன்னினமே அங்கிருப்பதாக நினைத்து, வந்து, தானியங்களைத் தின்ன முயற்சிக்கின்றன. அப்போது கண்ணிகளில் சிக்கிக்கொள்கின்றன.

இன்னும் இந்தக் காட்டுமராட்டிகள் கழுகுகளைப் பிரியமாகப் பிடிப்பர். கழுகின் தசை உணவாகவும், இறகு நரி பிடிக்கும் கண்ணிகட்காகவும் உபயோகிக்கப் படுகின்றன. இறந்து கிடக்கும் மாடுகளின் பக்கங்களில் பதுங்கி இருந்து மாட்டைத் தின்னவரும் கழுகுகளை இவர்கள் பாய்ந்து பிடிப்பது மிகமிக வேடிக்கையானதாகும். சிலகால் கரியபோர்வைகளைப் போட்டுப் போர்த்திக்கொண்டு செத்தமாட்டின் பக்கத்தில் படுத்துக் கொள்கின்றனர். அதன் இரகசியமறியாத கழுகுகள் பக்கத்தில் வரவும், "சட்டென்று" பாய்ந்து பிடித்துக்கொள்கின்றனர். பல தடவைகளில் அப்பறவைகட்கும் இவர்கட்கும் போர் நடப்பதுண்டு. ஆனால் கழுத்தை நன்கு அழுத்திவிட்டால் பறவைகளால் என் செய்யமுடியும்?

நரியை ஒரு தந்திரமுள்ள பிராணி என்கின்றோம்; ஆனால் இம்மராட்டிகள் நரிகளைவிடத் தந்திரமுடையவர்களாயிருக்கின்றனர். நரி மாமிசம் இவர்களால் சாப்பிடப்படுகிறது; நரித்தோல் பைகளாயமைக்க உபயோகப்படுகிறது.

#### நரிக் கோம்பு

இந்தக் காட்டுமிராண்டிகள் நரிகளை ஏமாற்றுவது போலவே, நரிகட்குச் சர்ட்டிபிக்கட் வழங்கும் மனிதர்களைக் (பட்டணவாசிகளையும்)கூட ஏமாற்றி விடுகின்றனர். நரிக்குக் கொம்புண்டென்று கூறி) இம்மராட்டிகளால் ஒருவித தோலுள்ள தசைப்பகுதி நாகரிகமடைந்தவர் களென்னும் பட்டணவாசிகளிடம் விற்கப்படுகின்றன. ஜனங்கள் நரிக்கொம்பு பாக்கியத்தைக் கொடுக்கும் 'கவசம்' என்று நம்பி அவற்றைப் பெற்றுக்கொள்கிறார்கள்.

#### பிச்சை யெடுத்தல்

வேட்டையாடுவதே நக்ல வண்ட்லுக்களின் தொழிலாக விருந்தாலும் பட்டணவாசிகளின் காற்றடித்த காரணத்தாலும், இயற்கை தந்த பூமியைத் தங்கட்குச் சொந்தமெனக்கூறி நக்ல வண்ட்லுகளின் உரிமையை ஓளவுக்குப் பாதிப்பதாலும், சிலர் பரமசிவன் தொழிலை மேற்கொள்கின்றனர். தமிழ் நாட்டில் தெருத்தெருவாய் சில காலங்களில் இந்த ஜாதி ஆடவரும் பெண்டிரும் பிச்சை யெடுக்க வருவதைக் காணலாம். அவர்களுடைய பாட்டுகளும் நடனமும் சர்வசாதாரணம் (24ம் பக்கம் பார்க்க.)

பிச்சை யெடுப்பதோடு இக்குருவிக்காரர்கள் ஊசிகளும் பாசிகளும் விற்பதுண்டு. இவர்கட்கு ஓட்டுரிமையிலோ, கட்டாயக் கல்வியிலோ முன்னேற்றத்திலோ வேட்கையில்லை.

#### பாஷை

இந்தியா முழுதும் ஹிந்தி பரவ வேண்டுமென்று பிரசாரம் செய்யும் தேசாபிமானிகள் இவர்களது பாஷையைக் கண்டால் திகைப்படைவார்கள். ஹிந்திப் பிரசார சபையின் சம்பந்தமேயில்லாது இவர்கள் தமிழ்நாட்டிலும் கூட ஹிந்தி பேசி வருகிறார்கள். இவர்களது பாஷையினால்தான் இவர்கள் வடநாட்டிலிருந்து வந்ததாகக் கூறப்படுகின்றது போலும்.

இவர்கட்கு சமூக, பொருளாதார, மத, தேசீய சீர்திருத்தங்களெதுவும் வேண்டாம். சாரதா சட்டத்தையும் தேடுவதில்லை. அன்றி தாங்களைத் தாழ்ந்தவர்களென்றோ, தாழ்த்தப்பட்டவர்களென்றோ, அழுத்தப்பட்டவர்களென்றோ கூறிக் கொள்வதுமில்லை.

#### வாழ்க்கை முறை

சுத்தமாக வாழவேண்டு மென்பதிலும் அவர்கட்குக் கவலைகிடையா. தலைமயிரை ஒரு தடவைக் கட்டினால் பல நாட்கள் வரையிலும் சீவவோ, அவிழ்த்துக்கட்டவோ செய்யமாட்டார்கள். க்ஷவரம் செய்யாததால் இந்த ஜாதியார் அடைந்திருக்கும் அவலட்சணம் நேரில் பார்க்க வேண்டுவதே. ஆடைகளை மிக அபூர்வமாகவே சுத்தம் செய்கின்றனர். ஆடவருடையவும் பெண்களுடையவும் பற்கள் "பற்காவி" என்ற ஒரு கலவையால் சாயமிடப்படுகின்றன. முகம், கை, மார்பு ஆகிய உறுப்புகளில் பச்சைகுத்திக் கொள்வது இவர்களுடைய வழக்கம். பெரும்பான்மையும் சிறுவர்கள் அவர்கள் பிறந்த இடத்தின் பெயராலேயே அழைக்கப்

படுகின்றனர். ஒரு நாள் நான் ஒரு சிறுவனிடம் "உன் பெயரென்ன?" என்று கேட்டபோது 'சித்தூர்' என்ருன். வெகுநேரம் பல கேள்விகளால் விளக்கம் கேட்ட பின்னரே அவன் பிறந்த வூர் சித்தூர் என்று தெரிந்து கொண்டேன்.

### உடை

காந்திஜீ போன்ற சீர்திருத்த வாதிகள் இவர்கட்கு ஆடைச் சிக்கனம் பற்றிப் பேசவேண்டியதில்லை. எவ்வளவு தீவிரமாக துணிமணிகளில் சிக்கன விரதம் கொள்ளலாமோ அவ்வளவு விரதம் கொள்கிருர்கள் இவர்கள். ஒரு போதும் புதுத் துணிகள் வாங்கப் போவதில்லை. பெண்கள் ஒரு 'பாவாடை'யும் ஒரு ரவிக்கையும் அணிவார்கள். தம் வாழ்வில் ஒருமுறை அணித்து விட்டால் அவை கந்தல் கந்தலாக கிழிந்து உடம்பை விட்டுத் தாமாகக் கீழே விழுந்தாலன்றி வேறு ஒன்றைப் போட்டுக்கொள்ள மாட்டார்கள். ஆடவர் பெரும்பான்மையும் நிர்வாணிகள் என்னலாம். ஆனல் இடையில் மட்டிலும் சிறிய ஒரு துணியைக் கட்டிக் கொள்கிருர்கள். பெண்கள் கழுத்தில் கோர்வை கோர்வையாகப் பாசிகளும் சிப்பிகளும் காணப்படுவது ஒரு பழமொழியாகும்.

### கடவுள் வழிபாடு

இம்மாட்டிகள் அனைவரும் ஹிந்துக்களாம். பல துஷ்ட தெய்வங்களை வழிபடுவர். ஆனல் காளி அல்லது துர்க்காதேவியே இஷ்ட தேவதை அல்லது குலதேவதை எனக் கொள்ளப்படுகிறது. சிலகால் மதுரை மீனாக்ஷியையும் வணங்குகின்றனர். வருடா வருடம் இம் முக்கிய தெய்வங்கட்குப் பூஜை போடப்படுகிறது. பூஜை நாட்கள்தான் இவர்கட்கு விசேஷ நாட்கள். அன்று பல ஆடுகளையும் எருமைகளையும் பலியிட்டுச் சாதம் படைத்துக் குடித்துக் களித்து இருப்பர். மீனாக்ஷியின் பக்தர்கள் மாமிசம் சாப்பிடுவதில்லை. இஷ்ட தெய்வங்களின் உருவம் வெள்ளியில் செய்யப்பட்டு அவர்களுடைய தலைவனின் பாதுகாப்பிலிருந்து வரும்.

### உறைவிடங்கள்.

இவ்விசேஷ ஜாதியார்கள் சிறிய புல் குடிசைகளிலேயே வசிக்கின்றனர். (படத்திற்கு 25-ம் பக்கம் பார்க்க) அதில், அவர்கள் காணுமின்பம் பெரிய மாடங்களிலும் மாளிகைகளிலும் கூடக் காணமாட்டார்கள். அந்த வீடுகளைக் காலா காலத்தில் இடத்துக்கிடம் மாற்றிக் குளக்கரைகளிலும், புறம் போக்குத் தரைகளிலும், அறுவடைசெய்து தரிசு கிடக்கும் வயல்களிலும் நிறுவித் தங்குவதைப் பார்த்தால், நம்போன்ருர் வியப்புறுவோம். அவ்வாறு வீடு கட்டும் போது அவர்கள் நிலச் சொந்தக்காரர்களிடம் உத்தரவு கேட்கவோ, சர்க்காரிடம் லைசென்ஸுக்கு மனுப்போடவோ செய்வதில்லை. அவர்களுடைய வீடுகளில் ஒருபுறம் திறந்திருக்கும். அதுவே வாயில். அஃதன்றி வேறு எவ்விதத் துவாரங்களும் கிடையா. அவ்விதமே அறைகளும் கிடையா. இந்த ஒரு அறை வீட்டில் ஆண்களும் பெண்களும் (சாமான்களுடன்) குழந்தைகளும் கூடி இருப்பது வேடிக்கையான தாகும். சிலகால் இவர்கள் கோழிகள் கூட இவ்வீடுகளில் வளர்ப்பதுண்டு.

---

### சத்திர வைத்தியத்தின் அற்புதங்கள்.

பிறவியிலிருந்தே கால் கை முடமானவர்களைக் குணப்படுத்த வழி கண்டு பிடித்து விட்டார்கள். சத்திர வைத்தியத்தினுல் அந்த பாகத்தை அறுத்து ஒட்டவைக்க முயன்ருலும், இதுகாறும் அதை சரியான நீளத்திற்கு நீட்டி வைப்பதற்குத் தகுந்த யந்திரங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை. இப்பொழுது அமெரிக்க ஆஸ்பத்திரி ஒன்றில் அதைக் கண்டுபிடித்திருக்கிருர்கள். இதனுல் பிறவியில் ஏற்படும் அங்க ஈனங்களைக் குணப்படுத்திவிடலாம்.

### வேதனையற்ற பிரசவம்.

லிவர்பூல் டாக்டர் ஒருவர் ஒரு யந்திரம் தயாரித்திருக்கிருர். அதன் வழியாக கர்ப்பிணிக்குப் பிரசவத்தின் வலி தெரியாதிருக்கும்படி ஒருவிதமான 'காஸ்' கொடுக்க முடிகிறது. அந்த யந்திரத்தை கர்ப்பிணியின் பக்கத்தில் வைத்துவிட்டால் அவளே வேதனை தோன்றும்பொழுது ஒரு பொத்தானை யமுக்கினுல் யந்திரத்திலிருந்து அந்த வாயு புறப்பட்டு வலியைக்குறைக்கிறது. இந்த யந்திரம் பரீட்சை செய்யப்பட்டு வருகிறது. இதனுல் நன்மையுண்டாகும் என்று கண்டால் ஒவ்வொரு பிரசவ ஆஸ்பத்திரியிலும் வைத்து விடலாம். அதன் உற்பத்திச் செலவு மிகக்குறைவு.

## ரயில் போக்கு வரவு

---

### மதராஸ்-எழும்பூர்

#### மெயின் லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 40 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 6 55 | மாலை 7 25 |
| கூடலூர் பாஸஞ்சர் .... | மாலை 4 0 | காலை 11 55 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர் .... | மாலை 9 30 | காலை 6 5 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | மாலை 5 35 |

#### கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாசஞ்சர் .... | காலை 11 15 | மாலை 2 55 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 7 30 | காலை 7 15 |

### மதராஸ்—ஸெண்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் .... | மாலை 8 30 | காலை 8 35 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 40 | மாலை 4 35 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 5 0 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| ,, எக்ஸ்பிரஸ் ... | மாலை 1 0 | மாலை 2 10 |
| ,, பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| ,, ,, .... | மாலை 9 40 | காலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 45 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 5 30 | — |
| ,, .... | 6 30 | — |
| மலபார் எக்ஸ்பிரஸ் ... | 8 5 | காலை 7 15 |
| ப்ளுமௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 35 |





### பினங்கு
### செட்டியார்கள் வர்த்தக சங்கம்.
#### பாராட்டு விருந்துகள்

---

சங்குநம்பை திருவாளர் பெ. நா. மு. ஏஜெண்டு பிச்சப்பா சுப்பிரமணியச் செட்டியார் அவர்கள் தாய் நாடு செல்லுவதை முன்னிட்டு, சங்க சார்பாக பிரிவு உபசாரத் தேநீர் விருந்து 29—11—34உ மாலை 5 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் நடை பெற்றது. உள்ளூரிலிருந்தும் வெளியூரிலிருந்தும் 200 செட்டியார் பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தனர். தேநீர் விருந்து நடைபெற்ற பின்பு சங்கத்தின் தலைவர் திரு. மு. ராம. வெள்ளையப்ப செட்டியார் தலைமை வகித்தார். தலைவர் முகவுரையாகப் பேசுகையில் பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரைப்பற்றி அநேகமாக எல்லாருக்கும் தெரியும் என்றும் நம் சமூக சீர்திருத்தத்தில் அதிகம் ஆர்வம் உள்ளவரென்றும், சென்ற 15 வருடங்களாகத் தனவைசிய ஊழிய சங்க மூலமாகப் பல அரிய தொண்டுகள் செய்திருக்கிருர்களென்றும், இச்சங்கம் காண வேண்டிய பல அரிய உதவிகளும் பல சிறந்த யோசனைகளும் செய்திருக்கிருர்களென்றும், குறிப்பிட்ட பிறகு சுப்பிரமணியன் செட்டியாருக்கு மலர் மாலை அணிவித்தார்கள். பிறகு திரு. நா. கு. குப்பாஞ்செட்டியாரும் போர்ட்டிக்ஸன் திரு. மு. கா. காசி விஸ்வநாதன் செட்டியாரும் திரு. பெ. நா. மு. முத்துபழனியப்ப செட்டியாரும் விருந்தினருடைய அரிய ஆற்றலையும், உயர்ந்த குணங்களையும் பெரிதும் பாராட்டிப் பேசினர்கள்.

ஸ்ரீ சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் எழுந்து சங்கத்தின் சார்பாகத் தனக்குச்செய்த பாராட்டு தலைப்பற்றி மிகவும் நன்றி செலுத்துவதாகவும், பல அன்பர்கள் தன்னைப்பற்றி ஆசி வார்த்தைகள் கூறியது அவர்களுக்குத் தன் மேல் இருக்கும் அன்பும், தான் சங்கத்தின் மேல் வைத்திருக்கும் அபிமானமுமே காரணம் என்றும் சங்கத்தில் பொம்பர்கள் சங்கத்தின் காரியங்களில் தன்னுடன் மிகவும் ஒத்து உழைத்து இருக்கிருர்களென்றும், பினங்கு நகரத்தார்கள் எக்காரியத்திலும் செவ்வனவே செய்வார்கள் என்பதற்கு அறிகுறியாக அவர்கள் ஸ்தாபனம் செய்திருக்கும் இச்சங்கமே அத்தாட்சியாக இருக்கின்றதென்றும் தன் உடல்நலம் குன்றி இருப்பதால் நான்கு மாத ஓய்வில் தாய்நாடு சென்று திரும்பி விடுவதாகவும் குறிப்பிட்டு தான் புறப்பட தங்களிடம் பிரியாவிடை பெற்றுக் கொள்ளுகிறேனென்றும் சொல்லி ஆசனத்தமர்ந்தார்கள். பிறகு தலைவர் முடிவுரையாகச் சில வார்த்தைகள் சொல்லிய பின்பு காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்று கூட்டம் நிறைவேறியது. திரு. வீரப்பனுக்குப் பாராட்டு.

#### திரு. வீரப்பனுக்குப் பாராட்டு

ஈபோ ராம. ராமசாமி செட்டியார் குமாரர் வீரப்பன் உயர்தரப்படிப்பிற்காகவும் இந்திய சிவில் சர்வில் பரீட்சைக்காகவும் நாளை பினங்கிலிருந்து புறப்படும் எல். எல். ஆல்டா கப்பலில் இங்கிலாந்து செல்வதை முன்னிட்டு சங்கத்தின் சார்பாக 30—11—34உ காலை 10 மணிக்குச் சிற்றுண்டிவிருந்து நடைபெற்றது. சங்கத் தலைவர் முகவுரையாக விருந்தினரைப்பற்றி பேசுகையில், நம் சமூகத்தில் முதல் முதலாக இந்நாட்டிலிருந்து உயர்தரப்படிப்பிற்குச் செல்லும் இளைஞரை நாம் பெரிதும் பாராட்டக் கடமை பட்டிருக்கிறோம் என்றும் நம் சமூகத்தின் பெருமைகளை எடுத்துக் காட்ட இது போன்ற இளைஞர்கள் முன்னுக்கு வரவேண்டுமென்றும், விருந்தினர் தன் படிப்புத் துறையில் வெற்றி பெற்று வரவேண்டுமென்றும் சங்கத்தின் சார்பாக தன்னுடைய ஆசி மொழிகளைக் கூறினர்.

விருந்தினர் சங்கத்தின் சார்பாகத் தனக்குச் செய்த விருந்திற்கு நன்றி பாராட்டுவதாகவும், இது போன்ற பெரியார்களுடைய வாழ்த்தே தன் படிப்பில் வெற்றிக்கு காரணமாகமாயிருக்கும் என்றும் கூறிய பின்னர் காரியதரிசியால் வந்தனோபசாரம் கூற பெற்று கூட்டம் இனிது முடிவு எய்தியது என்று காரியதரிசி நவம்பர் 30உ தேதியிட்டு எழுதுகிருர்.

### பாகனேரி.
#### தனவைசிய இளைஞர் சங்கம்.

டிசம்பர் 2-ந் தேதி மாலை 4 மணிக்கு இச்சங்கத்தில் சி. உ. சுப. உடையப்பா அவர்களின் தலைமையில் மூன்ருவது மாதக் கூட்டம் கூட்டப்பட்டது. அவ்வமயம் கடவுள் வணக்கமும் தமிழ்த் தாய் வணக்கமும் சுவாமி சோமசுந்தரம் அவர்களால் பாடப்பட்டு, தேகாப்பியாசம் என்பதைப்பற்றி பாணவன் திரு. நா. சுப்பையாவும், கல்வியைப்பற்றி மாணவி ஸ்ரீமதி சிவ. கண்ணம்மையும், சீர்திருத்தம் என்பதைப்பற்றி திரு. கண. மு. மு. சாத்தப்ப செட்டியாரவர்களும், இளைஞர் கடமையைப்பற்றி திரு. செ. சின்னத்தம்பியாரவர்களும், பத்திரிகைகளும் அவைகளின் பயனும் என்பது பற்றித் தோழர் கணபதியாரவர்களும், கம்பர் நினைவாற்றலைப் பற்றி திரு. செ. ரெ. இராமசாமியாரவர்களும் வெகு இனிமையாகச் சொற்பொழிவாற்றினர்கள். பின்பு தலைவரவர்கள் முடிவுரை கூறியபின், வெ. பெரி. பழ. மு. காசிவிசுவனாதன் செட்டியாரவர்களால் நன்றி கூறப்பட்டு கூட்டம் இனிது கலைந்தது எனக் காரியதரிசி ராம ஆவி. ராமனுஜன் அவர்கள் எழுதுகிருர்.

---

**எவ்வுயிரிடத்தும் அன்பாயிரு!**

# -: என்ன எழுதுவது? :-

"சில்லறை"

சில சமயம் எழுத்தாளர்களுக்கு 'எழுத்துச் சிக்கல்' என்ற வியாதி பிடித்துவிடும். என்ன எழுதுவது? என்ன எழுதுவது? என்ன எழுதுவது?

இந்த பிரச்னை எழுந்துவிட்டால்.... அதுதான் வியாதியின் ஆரம்பம். இந்தச் சமயத்தில் தான் குப்பைக்கூடைக்கு எழுத்தாளர் அஜீரணம் ஏற்பட்டு வாந்தி எடுக்கும்படி உண்பிக்க ஆரம்பித்து விடுவார்! முதல் பக்கத்தில் இரண்டு வரி............சி........டர் என்ற கிழிப்பு, காகிதம் இரண்ய சம்மாரம் மாதிரி இரண்டாகக் கிழிபட்டு வாயைப் பிளந்து காத்திருக்கும் குப்பைக்கூடைப் பெரியாரை நோக்கிச் சென்றுவிடும். பிறகு இரண்டு வரி, ஏன் இரண்டு எழுத்து...........அதே கதிதான். இதற்கிடையில் வியாதியை அதிகப்படுத்தும்படி, டிகிரி ஏற்றும்படி, கம்பாஸிட்டர் பக்கத்திலிருந்துக்கொண்டு, மரியாதையாக சார் 'மாட்டர்' (Matter) என்பான். இந்த அச்சு அரக்கனின் பிரதிநிதி இருக்கிறானே........... அப்பப்பா......... இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரமும் கவியாகச் சுடச்சுட உற்பத்தி செய்யும் காளமேகத்தையும் எல்லை கண்டுபிடித்து விடுவான். காளமேகம் எமகண்டம்பாடி லேசாகத் தப்பித்துக்கொண்டான் என்பது எனது அபிப்பிராயம்.......இல்லை, திடமான நம்பிக்கை. அவனைப் பத்திரிகை ஆபீஸில் போட்டுப் பார்த்தால்.... ....அகிலாண்ட நாயகி தந்த வரப்பிரசாதத்தைப் பெற்ற அந்த நாளை தனது உயிர் உள்ளளவும் சபித்துக்கொண்டு,

என்ன எழுதவென்று ஏங்கித்
தவித்தழுது

"பின்னத் தொழில் பெறவோ,
பேதையேன்—அன்னாளில்
தாயின் அருள் பெற்றேன்? தாரில்
இது வேண்டேன்
பேயிது வென் றேசிடுவான் 'பின்'"

என்று அடைத்துக் கிடக்கும் கோவிலில் கடவுளின் முன்பு தூக்குப் போட்டுக்கொள்ளுவான் என்பது நிச்சயம்.

அது கிடக்கட்டும்..............

எனக்கு ஒரு நாள் அந்த வியாதி பிடித்தது. பெரிய பெரிய டாக்டர்கள் இருக்கிறார்களே! அவர்கள் இந்த வியாதிக்கு மருந்து கண்டுபிடிக்கவேயில்லை, கண்டுபிடிக்கவும் முடியாது! எந்த டாக்டராவது ஒரு நூறு ரூ. பந்தயம் கட்டுங்கள் பார்க்கலாம். அவ்வளவுக்குத் தைரியம் இருந்தால்........ எனக்கு ரூ. 100 நிச்சயம்!

எனக்கும் அந்த வியாதி வந்தது. என்ன எழுதுவது? ஹிட்லரைப் பற்றியா? பொருளா தாரமா? இதையார் படிக்கிறார்கள்? தமிழைப்பற்றி எழுதினால் நாம்தான் படித்துக்கொள்ளவேண்டும். கதை எழுதினால் ஆமாம் கதை, அதிலும் நவரசம் சொட்டச் சொட்ட காதல் கதை.......................

காலை யிளம்பரிதி வீசும் கதிர்களிலே.......................

'ஸ்!'

பாரதியைக் காப்பியடிக்கிறான் என்றால்...............எனக்கே அப்படித்தான் தெரிகிறது...........................கிழித்துத் தள்ளு.

கதை வேண்டாம். கதை என்றால் கலியாணம் கிலியாணம் செய்து வைத்தால்தான் வாசகருக்கு மனம் சாந்தியடையும்; போயும் போயும் புரோகிதத் தொழில்தானா.....இது வேண்டாம்.

பின் என்ன செய்வது? அறிவை விருத்தி செய்யும் விஷயம், அல்லது ஹாஸ்யம்........ஆமாம் ஹாஸ்யம்....... யாரும் சிரிப்பதற்குக்கூட மனுப்போடுவார்களா?

"ஸார் மாட்டர்" என்று பின்னேயிருந்து ஒரு குரல்.

இந்தக் கூத்தில் சிரிப்பு வருமா? அல்லது சிரிப்பு ஒருவருக்கு ஊட்ட முடியுமா?

எனக்கு வேறு ஒன்றுதான் வந்தது. நெற்றிக்கண் இல்லையே என்ற வருத்தம்.

ஏதாவது எழுதுவது. மைப்புட்டியைப்பற்றி எழுதலாமா? அதற்குள் இங்கிதான் இருக்கும் என்று வாசகருக்குத் தெரியாதாக்கும். சில சமயங்களில், சில இடங்களில் இருக்காது........ஆனால் பத்திரிகை ஆலயங்களைப் பொறுத்தமட்டில் அதில் நீந்தலாம்.

பழைய பத்திரிகையைப் பார்த்தால்? ........கடைக்காரனுக்குக் கொடுத்து ஒரு துண்டு வெல்லம் வாங்கலாம்; கடைக்காரன் ஒருவேளை அதை சிறிது ஆசையுடன் கவனிக்கலாம். 'மிஸ்டர் வாசகர்,' பார்த்ததுந்தான் "சுவாமி, வேறு சாக்கிருந்தால் சொல்லும்" என்று விடுவாரோ.

அதோ இருக்கிறதே மணி, 'காலிங் பெல்' அதைப்பற்றி எழுதினால், அதன் உற்பத்தி, உபயோகம், ஸ்! சாரமற்ற பேச்சு. பள்ளிக்கூட மாணவன் மார்க்கிற்கு ஆசைப்பட்டு எழுதலாம், பத்திரிகைத் தொழிலில்...........

அதுவும் வேண்டாம்?

பின் என்ன எழுத?

'ஸார் மாட்டர்' என்று கேட்டது பின்னிருந்து ஒரு குரல்.

எனக்குக் கோபம் வந்துவிட்டது. இதைப்பார் என்று குப்பைக் கூடையை அவன் கையில் திணித்துவிட்டு, 'தேர்தல் கலவரம்' என்று வெகு வேகமாக எழுதிக்கொண்டு போனேன். என்ன எழுதினேன் என்று எனக்குத் தெரியாது. அதுதான் சுவாரஸ்யம்.

எவ்வளவு நேரம் சென்றதோ?

"ஸார்!"

"என்ன மறுபடியும்?"

"புரூப் ஸார்" என்றான்.

அவன் புதுசாக வந்த பையன். குப்பைக் கூடை மான்மியத்தைப் புரூப் (proof) போட்டு வந்துவிட்டான்! நல்ல பையன். இவனை வைத்துக் கொண்டு........இவனைப் பொருட்காட்சி சாலையில் வைப்பதா? அல்லது........... யாரை?

"இந்தா இதை எடுத்துப்போ?" என்று எரிந்து விழுந்தேன்.

சாவதானமாக "ஆகட்டும் சார்" என்று எழுதிய கத்தையைக் கொண்டு போனான்.

யாருக்கு வெற்றி?

எழுத முடியாவிட்டால், அச்சுக் கோர்க்க மூளையையாவது கொடுக்க வேண்டும்.



# விடுதலை என்றால் என்ன?

(மகாத்மாவைப்பற்றி கிருஸ்தவரின் அபிப்பிராயம்)

(கிரிஸ்டியன் ஸென்சுரி என்ற பத்திரிகை எழுதியதின் மொழிபெயர்ப்பு.)

இந்தியத் தேசீயத் தலைவர்களுக்கிடையே, இப்பொழுது இருப்பதை விடப் பன்மடங்கு அபாயகரமான பிளவுகள் ஏற்படும் என்று கீழைப் பிரதேசங்களைப் பற்றி ஆராயச்சி செய்பவர்களில் சிலர் நினைக்கலாம். இந்தியாவின் ஒற்றுமைக் குறைவினால், பிரிட்டிஷ் அரசியல் இந்தியாவிற்குக் கொடுக்கும் உரிமைகளைக் குறைக்கும் என்றும் அவர்கள் எதிர்பார்க்கலாம். தற்பொழுது இருக்கும் காங்கிரஸ் கட்சியின் பலம் குறைந்துவிடும் என்றும் எதிர்பார்க்கலாம். பத்து வருஷங்களுக்குள் பிரிட்டிஷ் அரசியலின் சக்தி முன்பு இருந்ததுபோல் அதிகரித்துவிடும் என்றும் அவர்கள் அரசாட்சிக்குப் பங்கம் வாராது என்றும், அவர்கள் சிரமமில்லாமல் அனுமானித்துவிடுவார்கள். ஆனால் கோடிக் கணக்கான மக்களுக்கிடையே ஏற்பட்டிருக்கும் பொருளாதாரக் கஷ்டம், இந்திய மக்களிடை புரட்சி எண்ணங்களைப் பரப்பி, இதைவிடப் பயங்கரமான தேசீயக் கிளர்ச்சி ஒன்று மறுபடியும் முளைக்க வைக்கலாம் என்று அவர்கள் எதிர்பார்க்கலாம். அந்த எழுச்சி அஹிம்சைத் தத்துவத்தைக் கேவலமாகத் தள்ளி, இந்தியாவையும் பிரிட்டனையும் இரத்த வெறியில் அமுக்கிவிடும்.

ஆனால் இந்தியாவோ, அல்லது பிரிட்டனோ, உலகமோ, தன் கண் முன்பு என்ன நடக்கிறது, மகாத்மா காந்திக்கு என்ன நடக்கிறது என்று கவனிக்கவில்லை. அவர் இந்தியாவின் விடு



தலையை, அஹிம்சை முறையை அடிப்படையாகக் கொண்ட ஒத்துழையாமையியக்கத்தினால் பெற முயற்சித்தது, முதலில் உலகத்தின் கவனத்தைக் கவர்ந்தது. எப்பொழுதும் ஆயுதங்களைப் பற்றியும், ஆயுதப் பரிஹாரணத்தைப் பற்றியும் கேட்டுக் காதுகள் புளித்துப்போன மேல் நாட்டினருக்கு, தடியடிகள் பட்டு, சிறை செல்லும் அஹிம்சை முறையின் வழிகள் முதல் முதலாகத் தெரிந்தது. இது நடக்காத காரியம் என்று உலகம் தள்ளி விட்டிருக்கலாம். ஆனால் அதன் முக்கியத்தை அவர்கள் கவனியாதிருக்கவில்லை. இன்று மகாத்மா தனது இயக்கத்தை இதற்கு முன்பு இருந்ததைவிட மிகவும் நுணுக்கமான பாரமார்த்திகத் துறையில் நடத்திச் செல்லுகிறார். இதன் பயன் இந்தியாவில் இன்னும் வரவில்லை. வருவதற்குச் சில காலம் பிடிக்கும். ஆனால் நமது தலைமுறைதான் இதன் அர்த்தத்தைப் பூரணமாக அறியவேண்டிய நிலையில் இருக்கிறது.

தற்பொழுது காந்திஜியின் நிலையை—புதிய காந்தி என்றும் கூறலாம்—உணரவேண்டுமாயின், அவர் இந்தியாவின் விடுதலை, பாரமார்த்திக இலட்சியமும், அரசியல் முடிவுமாகக் கருதுகிறார் என்பதை உணரவேண்டும். சுதந்திரப் போராட்டங்கள் எல்லாம் இம்மாதிரித்தான் என்று முதலில் கூறப்படுகின்றன; ஆனால் காந்திஜியிடம் வார்த்தைக்கும், செயலுக்கும் அர்த்தம் ஒன்றுதான். அவருக்கு அரசியல் பாரமார்த்திக உண்மைகளைக் காணும் முயற்சியாகவும், அதன் முடிவாகவும் இருக்கிறது. இந்த இயக்கம் முதல் முதலாக ஆரம்பிக்கப்படும் பொழுது இதன் மகத்தான முடிவு அரசியல் சுதந்திரமாயினும், அதன் ஹிருதயத் அடிப்பில் அது ஆத்மிக வழியைப் பின்பற்றியதாகவே இருக்கும் என்று கருதினார். அவருடைய இந்த அபிப்பிராயத்தை வேடிக்கையாகத் தள்ளு முன், இந்தியப் பொதுமக்கள் இந்தத் தத்துவத்திற்கு இதற்கு முன்னர் சரித்திரத்திலேயே நடந்திராதபடி, அவ்வளவு அதிகமாக விழித்தெழுந்தார்கள். இந்த அஹிம்சா ஒத்துழையாமையியக்கத்தின் உதாரணமான இதன் முடிவு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையே அசைத்துவிட்டது என்பதை மனதில் வைக்கவேண்டும்.

காந்திஜி இந்த தேசீயப் போராட்டத்தில் நுணுக்கமாக ஈடுபட ஈடுபட, அது தீண்டாதாரின் கதியுடன் மிகவும் பிணிக்கப்பட்டிருப்பதைக் கண்டார். ஆத்மிக சக்தியினால் இந்தியா விடுதலையை அடையுமுன், இந்தியா தனது ஆத்மிக பரிசுத்தத்தைத் தேடிக்கொள்ள வேண்டும் என்று உணர்ந்தார். 60 கோடி மக்கள் மிருகப்பிராயத்தில் இருக்கும்படியாக விடுக்கப்படும்பொழுது தேசீய விடுதலை ஏற்படுமா? தங்கள் சொந்த மக்களுக்கு உரிமை கொடுக்குமுன் இந்தியா ஜனநாயக உரிமையைக் கேட்க என்ன நியாயம் இருக்கிறது!

தனது ஆத்மிக பரிசோதனைச் சமயங்களில் இதைப்பற்றி ஆழமாக யோசித்துத் தங்கள் சொந்த ஜாதி ஹிந்துக்களுக்கு உரிமை கொடுக்கப்படுமுன், பிரிட்ட

சீமைப் பத்திரிகையிலே ஒரு சின்ன வேலை நடந்தது. பத்திரிகாசிரியருக்கு இந்த வியாதி ஒருதரம் திடீரென்று பிடித்துவிட்டது. பத்திரிகையோ தினசரி. அங்கு காலையில் விற்பனைக்குப் போய்ச் சேரவேண்டும். ஆசிரியருக்கு ஒன்றும் தோன்றவில்லை...........ஆனால் ஒன்று திடீரென்று தோன்றியது. 25 வருஷத்திற்கு முந்திய அவர் பத்திரிகையின் தலையங்கம் ஒன்றைப்பெயர்களை மட்டும் மாற்றி அச்சுக்கு விட்டுவிட்டாராம். அன்று 'தலையங்கம் வெகு ஜோர்' என்று ஊரெல்லாம் பேச்சாம்.

இந்தக் கதையும் அதைப்போல் சீமைச் சரக்கோ என்னவோ?

ஆனால் இந்த விபாசம் 25 வருஷத்திற்கு முந்திய சரக்கல்ல. அச்சுக்குக் கொடுக்கும்பொழுது எழுதிய மைகூடக் காயவில்லை!

ஆமாம்! நிஜமாக மை காயவில்லை!





னுடன் போராட பாரமார்த்திக உரிமை கிடையாது என்ற முடிவிற்கு வந்தார்.

இதன் முடிவு—ஜாதி ஹிந்துக்களுக்கு—அதிக ஆச்சரியமாக இருந்தது. பிரிட்டனிடம் போராடுவதை நிறுத்தி இரண்டு வருஷமாக, தீண்டாமை ஒழிக்க ஆரம்பிக்கப்பட்ட இயக்கம், இலட்சியத்தினின்றும் மாறியது என்று பட்டது. காந்திஜி சமூகப் பிரச்னையில் ஈடுபடத் திரும்பிய பொழுது பிரிட்டன் அரசியல் சம்பந்தமான உரிமைகளைக் கொடுக்கத் திட்டம் போட்டுக் கொண்டிருந்தது. இதன் முடிவு அதி முக்கியமானது. முதலில் நம்பிக்கையில்லாமலும் பிறகு கோபமாகவும் இருந்த ஜாதி ஹிந்துக்களின் எதிர்ப்பு இருந்தும், காந்திஜி தீண்டாமை என்ற மகத்தான பாபத்தைப் பற்றி இந்தியாவின் உள்ளத்தை அடிப்படையாகக் கிளறி விட்டார். சதாப்தங்களாக இருந்து வந்த தீமையின் கொடுமையை இரண்டு வருஷத்திலேயே மாற்றுவதில் வெற்றி பெற்று விட்டார்.

தேசியக் காங்கிரசின் ஒற்றுமைக்கும் சக்திக்கும் சிறந்து பாதகமான போதிலும் இதைச் செய்திருக்கிறார். அவருடைய நெருங்கிய நண்பர்களில் பலருக்கு, சுயராஜ்யப் போராட்டத்திலிருந்து இப்படி ஏன் திரும்பிவிட்டார் என்று அறிந்துகொள்ள முடியவில்லை. இதுவரை தேசிய அபிப்பிராயம், “இது உள்நாட்டு இயக்கம், இந்தியா தன் சுய உரிமையைப் பெறுமுன், சமூக ஊழல்களைச் சீர்திருத்த வேண்டுமென்று எதிர்பார்ப்பது தவறு,” என்பது தான். இதற்கு மகாத்மா கிராமங்கள் தோறும் சென்று திரும்பத் திரும்ப அழுத்தமாகச் சொல்லிய பதில், “இந்த மகத்தான அபத்தத்தை நீக்கு முன் இந்தியா விடுதலையடைய நியாயமில்லை. விடுதலை இருந்தும் பிரயோசனம் இல்லை” என்பது.

அந்தப் பதிலில்தான் காந்திஜியின் மேதை தெரிகிறது. மிகவும் நெருக்கடியான நிலையிலிருக்கும் தற்போதைய மக்கள் அதைக் கவனிப்பார்களா? அவர் மறுபடியும் மனித வர்க்கத்தின் அசட்டுத்தனமான சோம்பல் மயக்கத்தை எதிர்த்திருக்கிறார். இதற்கு முன்பு மிருக பலத்தினால்தான் விடுதலை என்ற கொள்கையை எதிர்த்துச் சொல்லியதின் அடிப்படையான தத்துவமும் அதுதான். இந்தத் தத்துவத்தின் நுணுக்கமான அடிப்படையைச் சொல்லுவது, ‘நியாயத்தை எதிர்பார்க்கு முன், நியாயமாக நடந்துகொள்ள வேண்டும்’ என்பது. நியாயத் தீர்ப்பு தெய்வத்தின் கோவிலில்தான் முதல் முதலாக ஆரம்பிக்க வேண்டும் என்ற தீர்க்கதரிசியின் வர்க்கத்தைச் சேர்ந்தவர். அதைவிட மகத்தான உண்மையை, தெய்வத்தின் அருள் சமூக தர்மம் ஸ்திரமான பிறகுதான் என்று கூறிய அந்தத் தீர்க்கதரிசியின் ரகத்தைச் சேர்ந்தவர்.

மேலாக நோக்குகிறவர்களுக்குக் காந்திஜி அரசியலில் இருந்து மறைவதாகக் காணப்படும். உண்மையில் அவர் ஓர் மகத்தான தத்துவத்தை நமக்கு எடுத்துக் காட்டுகிறார். இந்தியாவின் பாரமார்த்திக தத்துவத்தின் ஆழமான உண்மையை, சரித்திரத்தின் மகத்தான சம்பவங்களுக்கு முக்கியமாக முன்னணியில் மதம் இருக்கவேண்டும் என்ற உண்மையை எடுத்துக் காண்பிக்கிறார். இந்தியா அவர் காட்டும் பாதையில் செல்லுமா? அது நடக்கக்கூடியதாகத் தெரியவில்லை. இதைவிட முக்கியமானது உலகத்தின் மற்றப் பாகங்களில், மதத்தின் பெயரால் விடுதலையைக் கேட்பவர்கள், காந்திஜி சொல்வதின் பொருளை அறிந்திருக்கிறார்களா என்பதுதான்.





# விகடத்திரள்

வாங்குபவன்:—இக் குடை எத்தனை வருஷத்திற்கு உத்திரவாதம்?

கடைக்காரன்:—ஒரு வருஷத்திற்கு.

வாங்குபவன்:—பிறகு........?

கடைக்காரன்:-பிறகு மற்றொரு குடை வாங்கிக் கொள்ள வேண்டும்.

அ. புதூர், எஸ். டி. எஸ்.

* * *

உபாத்தியாயர்:—லாகிரிவஸ்து உபயோகிப்பவர்களை என்ன செய்ய வேண்டும்?

பையன்:—நல்ல சாராயக் கடையில் கொண்டு விட வேண்டும்.

—என். எம். பொன்னையா.

* * *

வேலைக்காரி:—தங்களை எப்பொழுது எழுப்பட்டும்?

எஜமானி:—நான் சொல்லியனுப்பும் போது வந்து எழுப்பு. —என். வி. வி.

* * *

தந்தை:—அடே, உனக்கு எத்தனை விரல்கள்?

சிறுவன்:—பத்து.

தந்தை:—நான்கு விரல் போய்விட்டால் என்னவாகும்?

சிறுவன்:—கை நொண்டியாகும்.

—எஸ். லக்ஷ்மி (காரைக்குடி)

* * *

தாய்:—நீ பெரியவனானால் என்ன செய்யப் போகிறாய்?

பிள்ளை:—போர் வீரனாகப் போகிறேன்.

தாய்:—உன் விரோதிகள் உன்னைக் கொன்று விடுவார்களே.

பிள்ளை:—அப்படியானால் நானே விரோதியாயிருந்து விடுவேன்.

—புதுவை, கே. காசி.

* * *

இன்ஸ்பெக்டர்:—வட்டம் என்றால் என்னவென்று தெரியுமா?

ஓர் சிறு பையன்:—தெரியும்; பரீட்சைக் காலங்களில் வாத்தியாரால் என் பேப்பரில் போடப்படும் ஒரு சித்திரம்.

—எஸ். செல்லம்மாள்.

* * *

கிராம முன்சீப்:—ஏண்டா சுப்பா! உன் மாடு தொழுவில் எட்டு நாளாய்க் கட்டியிருக்கிறதே! இரண்டு ரூ. கொடுத்து அதைப் பிடித்துக் கொண்டு போ. இல்லாவிட்டால் ஏலம் போட்டு விடுவேன்.

சுப்பன்:—நன்றாய்ப் போடும்! அதன் தோல்கூட ஒரு ரூபாய்க்குப் போகாதென்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும்.

—S. T. S. Vasan.

* * *



நோயாளி:—10 நாளைக்கு முன் என் கால் வலி நீங்க ஒரு “பிளாஸ்டர்” தந்தீர்களே; ஞாபகமிருக்கிறா?

டாக்டர்:—அதற்கென்ன வேண்டும்?

நோயாளி:—இப்போது அந்த “பிளாஸ்டர்” நீங்க ஒரு மருந்து வேண்டும்.

—டி. என். மாணிக்கம்.

* * *

நொண்டிப் (பிச்சைக்காரன்:—கதவு தாளிட்டிருக்கும் வீட்டில் கதவை தட்டி) ஐயா! என் கால்........இங்கே ஏதாவது.

வீட்டுக்காரன்:—போ, ஐயா? உன்னுடைய கால் இங்கே இல்லை. போ.

—கே. காசி.

* * *



செல்லய்யா:—நான் ஓர் நாவல் எழுதப் போகிறேன்.

ராமய்யா:—உனக்கு எழுதத் தெரியுமா?

செல்லப்பா:—அதற்கென்ன ‘டைப் ரைட்டர்’ ஒன்றை உபயோகித்துக் கொண்டால் போகிறது.

—ஆர். கே. ராமனுதன்.



## ரோபட் என்ற இரும்பு மனிதன்

லண்டன் விஞ்ஞானியான புரொபெஸர் ஹாரி மே இரும்பினால் 6 அடி 4 அங்குல உயரமும், ஒரு டன் இடையும் உள்ள ஒரு யந்திர மனிதன் செய்து இருக்கிறார். தற்பொழுது அதை அமெரிக்காவில் காட்சிக்காக வைத்திருக்கிறார்கள். இது நுணுக்கமான யந்திர வேலைப்பாடு அமைந்தது. கை கால்களை அசைத்து எழுந்து நிற்கும், துப்பாக்கியை வைத்துச்சுடும், கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லும். அந்த விஞ்ஞானி இதற்கு ஆல்பா என்ற பெயரிட்டிருக்கிறார்.

சமீபத்தில் இதைக்காட்சிக்காக வைக்கப்பட்ட மான்ஹாட்டன் ஸ்டோரில், இதற்காகத் தனியாக ஒரு மேடை ஒன்று கட்டி அதில் ஆல்பாவை உட்காரவைத்துக் கால்களைக் கெட்டியாக மேடையுடன் தரையிடப்பட்டிருந்து.

பிறகு புரொபெஸர் மே, 'விழித்துக் கொள்' என்று கட்டளையிட்டவுடன், அதன் கண்கள் தணல்போல் பிரகாசிக்க ஆரம்பித்தன.

"எழுந்திரு," என்று கட்டளையிட்டார். ரோபட் உள்ளிருந்த யந்திரங்கள் கிர்ர் என்ற சப்தத்துடன சுழல ஆரம்பித்தன. மெதுவாக எழுந்து நிற்க ஆரம்பித்தது.

"வலக்கையைத் தூக்கு!" என்றார் விஞ்ஞானி. அதுதன் பிரம்மாண்டமான கைகளால் ஒரு நாஜி ஸல்யூட் போட்டது.

அது புரொபெஸர் மே கட்டளை இட்டதற்கு ஏற்றதுபோல் இருகைகளையும் தூக்கவோ, தலையை அசைக்கவோ, அல்லது வாயைத் திறந்து மூடவோ செய்தது.

பிறகு அவர் அதனிடம் 12 கேள்விகள் கேட்டார். அவ்வளவிற்கும் சரியான விடை பகர்ந்தது. பிறகு துப்பாக்கியினால் சுடும்படி கட்டளையிட்டவுடன், அப்படியே செய்தது.

ஆல்பா என்ற யந்திர மனிதன், முப்பது கேள்விகளுக்குச் சரியான விடை பகருவான். அதாவது முப்பது கேள்விகளும் சரியான, அதற்குத் தெரிந்த கேள்விகளாக இருக்கவேண்டும். அப்பொழுது தான் பதில்சொல்ல முடியும். ஏனென்றால் ஆல்பா என்ற யந்திர மனிதனுக்கு பாஷையை அர்த்தப் படுத்திக்கொள்ளும் பகுத்தறிவு கிடையாது. இரகஸியம் என்னவென்றால் குரோமியம் தகடுபதிக்கப்பட்ட கவசத்தினுள், அந்தயந்திரத்தில் முப்பதுமெழுகினால் ஆன ரெக்கார்டிங் ஸிலின்டர்கள் இருக்கின்றன.

இது யந்திரத்தின் ஹ்ருதயத்துடன் வெகு நுணுக்கமாகப் பிணிக்கப்பட்டு இருக்கின்றன.

நாம் ஒரு கேள்விபோட்டோம் என்று வைத்துக் கொள்ளுவோம். அந்தக்குரல் மின்சார நாடியாக மாறி அது இந்த ரெக்கார்டிங் ஸிலின்டர்களை இயக்குகிறது.

கேள்விகள் சரியான விதமாகப் போடவேண்டும். இந்த யந்திரம் குரலின் சப்த வித்தியாசங்களினால் பேசுவதாகையால், விஞ்ஞான சாஸ்திரி ஒவ்வொரு பதிலுக்கும், ஒரு குரல் ஏற்படுத்தியிருப்பார். அந்த வித்தியாசம் இல்லாவிட்டால் யந்திரம் இயக்காது. உதாரணமாக, "வாரத்தில் எத்தனை நாட்கள்?" என்ற கேள்வியைக் கேட்டால் பதில்சொல்லும் என்று வைத்துக் கொள்ளுவோம். கேள்வியை மாற்றி "எத்தனை நாட்கள் வாரத்தில்?" என்று கேட்டால் அது பதில் உரைக்காது.

புரொபெஸர் மே இதைத் தயாரிப்பதற்காக 14 வருஷம் செலவழித்திருக்கிறார்.

இது ஒரு தடவை திடீரென்று கையிலிருந்த துப்பாக்கியைச் சுட்டு, விஞ்ஞானிக்கு கையில் காயம் உண்டாக்கியிருக்கிறது. மற்றொரு தடவை, அது கையைத் திடீரென்று தொங்கப் போட்டதினால் அவருடைய உதவியாட்களில் ஒருவருக்கு பலத்த காயமேற்பட்டு ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

## கோழி முட்டை சேவலா பெட்டையா!

குஞ்சு முட்டையிலிருக்கும் பொழுதும், பிறந்து இரண்டு மணியாவதற்குள்ளும், சேவலா, பெட்டையா என்று சொல்லிவிடக் கூடியவர்கள் ஜப்பானியர்கள். அவர்களுக்கு இத்திறமை ஒரு அற்புத சக்தி மாதிரி இருக்கிறது. இப்படி முட்டைக்கு ஜாதி கண்டு பிடிக்கும் ஜப்பானிய நிபுணர்கள் இங்கிலாந்திற்கு வந்துதங்கள் திறமைகளை நிரூபித்திருக்கிறார்கள்.

## அமெரிக்க ஆகாய விமானப் படை

அமெரிக்கக் கவர்மெண்டு பிரிட்டன் விமானப் படைகளை விடத் துரிதமாகப் பறக்கக் கூடிய ஆகாய விமானங்களைத் தயாரிக்கப் போகிறதாம். பிரிட்டனுடைய விமானங்களின் வேகம் மணிக்கு 250 மைல். அமெரிக்க விமானம் 300 மைல் மணிக்குப் பறக்கக் கூடியதாக இருக்குமாம். ஒவ்வொன்றிலும் ஒரு பீரங்கியும் வைக்கப் பட்டிருக்கும்.

## தாக்ஷந்தில் தண்ணீர் குழாய்

ஸோவியத் குடியாட்சியைச் சார்ந்த மத்திய ஆசியப் பிரதேசத்திலிருக்கும் தாக்ஷந்தில் சூரியனின் உஷ்ண சக்தியால் தண்ணீர் இறைக்கும்படியான ஒரு யந்திரத்தை நிருமித்துக் கொண்டிருக்கிறார்கள். இது 10 மணி நேரத்தில் 10 லட்சம் காலன்கள் தண்ணீர் இறைக்குமாம். நிபுணர்கள் இதைச் செய்து விட்டாலும், இதை நடைமுறையில் லாபகரமாக உபயோகப்படுத்தக் கூடியதா என்று சந்தேகிக்கிறார்கள்.





## சந்திரன் தகர்ந்துவிடும் நிலாவொளி அதிகரிக்கும்

வருங்காலத்தில் பூலோக வாழ்க்கை சௌகரியமாக இருக்காதென்றும், அடிக்கடி வால் வெள்ளிகள் பூமியின் மீது விழுந்து வசிப்பவர்களை நாசப் படுத்தும் என்றும், வான சாஸ்திரியான ஸர் ஜேம்ஸ் ஜீன்ஸ் கூறுகிறார். ஏனென்றால் சந்திரமண்டலம் பூமியை நெருங்கிக் கொண்டே வருகிறதென்றும் ஒரு காலத்தில் அது மிகவும் சமீபத்தில் வந்தவுடன் உடைந்து விடும் என்றும் சந்திரமண்டலம் உடைந்து விட்டாலும் நிலாவொளி போய்விடாது, இப்பொழுது இருப்பதைவிட அதிகமாகும் என்றும் கூறுகிறார். சந்திரனின் உடைந்த துண்டங்கள் அதிகமாக நிலாவைப் பொழியுமாம். இரவு முழுவதும் சந்திரவொளி இருந்து கொண்டே இருக்கும். ஆனால் பூமியில் உயிர் வாழ்வது மிகவும் மிகவும் அபாயகாமானதாக இருக்கும். ஏனெனில் அடிக்கடி உடைந்த சந்திர பிண்டங்கள் ஒன்றிற்கொன்று முட்டிக்கொண்டு வால் வெள்ளிகளாக பூமியில் உதிரும்.

## பிரேஜிலில் ரேடியோ

தென் அமெரிக்காவைச் சேர்ந்த பிரேஜிலில் 3,300,000 சதுர மைல் விஸ்தீரணமுள்ள பிரதேசத்தில் கம்பியில்லாத தந்திகள் வைக்கப்பிரிட்டிஷ் என்ஜினியர்கள் செல்லுகிறார்கள். இதற்கு லக்ஷக்கணக்கான பவுன்கள் செலவாகும் என்று தெரிகிறது.

## சுறு வேட்டை

ஆஸ்திரேலியாவிற்கு வடக்கே இருக்கும் தாமூர் கடலில் ஏராளமான சுறு மீன்கள் இருக்கின்றன. சமீப காலமாக கடலின் மீதுதான் ஆகாய விமானப் பாதை செல்லுவதால், அதிலிருக்கும் சுறு மீன்களைக் கொல்லவோ அல்லது வேறு இடங்களுக்கு விரட்டிவிடவோ, டச்சுக்காரர்களும், போர்த்துக் கேசியரும், வெடிகுண்டுகள், பீரங்கிகள் சகிதம் சென்றிருக்கிறார்கள். இதில் அந்த பிரதேசத்தைச் சார்ந்த 47 சுதேச ராஜாக்களும் கலந்திருக்கிறார்கள்.

## யுக்கலிப்டஸ் கரடி.

நீலகிரியில் ஒருவித மரமேறும் கரடி இருக்கிறது. இது யுக்கலிப்டஸ் மரத்தின் தழைகளை சாப்பிடும். ஆஸ்திரேலியாவிலும் இக்கரடி இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

## குயிலை இழுக்கும் காந்தம்

இங்கிலாந்திலிருந்து எந்தக் குயிலைப் பறக்க விட்டாலும் அவை ஆப்ரிக்காவின் தென் பகுதியை நோக்கியே பறக்கின்றனவாம்.

## கடல் பசு.

அட்லாந்திக் மகாசமுத்திரத்தில் ஒருவித கடல் பசுக்களிருக்கின்றன. இவை ஆப்ரிக்காக் கடற்கரை ஓரத்திலும் தென் அமெரிக்காவிலும் அடிக்கடி வருகின்றன. இலை தழைகளைச் சாப்பிடுவதில் இவற்றிற்கு மிகுந்த விருப்பம். பல வருடங்களாக இவற்றில் ஒன்றைப் பிடிக்கப் பலர் முயல்கின்றனர்; முடியவில்லை.

## லெமிங்ஸ்.

லெமிங்ஸ் என்பது ஒருவிதமான மிருகம். இது பன்றியைப்போல குட்டியிட்டு அதிசீக்கிரத்தில் பெருகிவிடும். பெருகினால் வேறிடங்கட்குச் செல்வது இயல்பு. அவ்வாறு ஆயிரக் கணக்கில் செல்லும்போது வழியில் எத்தனைய தடையேற்பட்டாலும் பொருட்படுத்தா. முன் செல்வதே அவற்றின் இயல்பு.

## மரங்கொத்தியின் கண்.

மரங்கொத்தி யென்ற பறவையோர் அபூர்வ பிராணி. அதனால் நாலாபுறமும் கண்களைத் திருப்பித் திருப்பிப் பார்க்கமுடியும். குஞ்சுகளைக் காப்பாற்றுவதில் மிகுந்த கவனமெடுப்பது இயற்கை. அபாயம் வருவதை அறிந்தால் தம் கால்களினிடையே குஞ்சைத் தூக்கி வேறு இடங்கட்குக் கொண்டு போய்விடும்.

## விஷமில்லாப் புகையிலை

புகையிலையி லிருக்கும் விஷமாகிய 'நிக்கொட்டைன்' என்ற சத்தை நீக்கி, அதனைப் பயிர்செய்து வருகிறார்கள். ஜெர்மனியில் சுமார் 250 விவசாயிகள் இவ்விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனராம். இப்புதிய புகையிலையின் நிறம், தங்க நிறம், அல்லது எலுமிச்சம் பழ நிறத்தை ஒத்திருக்கின்றதாம்.

---

## புதுவயலில் ஷஷ்டியப்த பூர்த்தி விழா

புதுவயல் திரு உ. பெரி. உ. பெரிய கருப்பன் செட்டியாரவர்கட்கு 19-ந் தேதி ஷஷ்டியப்த பூர்த்தி சாந்திக் கல்யாணம் நடைபெற்றபோது உள்ளூர் சரஸ்வதி சங்கத்திற்கு நன்கொடை அளித்தார்.

---

மூட மதி யகற்று!

# செய்தித் திரட்டு

சணல் சாகுபடி சம்பந்தமாகச் சணல் வியாபாரிகள் கூட்டமொன்று மாத்ரிபூரில் நடைபெற விருக்கிறது.

* * *

லாகூரில் மௌலானா புகாரி பொதுக் கூட்டத்தில் பேசியதற்காக இ. பி. கோ. 53 பிரிவுப்படி கைது செய்யப்பட்டதாக டிசம்பர் 8-ந் தேதிச் செய்தி கூறுகிறது.

* * *

உலகத்தின் புராதன மரம் அமெரிக்காவில் யோஸ்மைட் நாஷனல் பார்க்கில் இருக்கின்றதாம். இதன் வயது 3800 ஆண்டுகள் என்று சொல்லுகிறார்கள்.

* * *

தலைவலியில் 20 தினுஸுகள் இருக்கின்றனவாம். இதனால் வேலைகள் தடைபடுவதில் உலகிற்கு 10 லட்சம் பவுன் ஆண்டு ஒன்றுக்கு நஷ்டம் ஏற்படுகின்றதாம்.

* * *

ஒரு கட்டு சீட்டைக் கொண்டு 800 விளையாட்டுகள் வெவ்வேறு வகையில் விளையாடலாமாம். இதற்கென்று எத்தனையோ புத்தகங்களும் வெளிவந்திருக்கின்றன.

* * *

திரு. அபயங்கரின் தேக நிலை மிகுந்த கவலைக்கிடமாக இருப்பதாகவும் அங்கு சென்றிருந்த மகாத்மா அவருடைய சுகத்திற்காகப் பிரார்த்தனை நடத்தியதாகவும் நாகபுரிச் செய்தி கூறுகிறது.

* * *

கேரள மாகாண அரசியல் மகாநாட்டை அடுத்த ஏப்பரல் மாதத்தில் கூட்டுவதாக 7ந் தேதி கூடிய கேரள காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கூட்டம் தீர்மானித்திருக்கிறது.

* * *

பூரி ஜில்லாவில் குர்தா என்ற விடத்துக்கருகில் பழைய மாதிரி பீரங்கிகள் பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த பீரங்கின் முற்காலத்து பூரி ராஜாக்களுக்குச் சொந்தமானது என்று தெரியவருகிறது.

* * *

லண்டன் காமன்ஸ் சபையில் திரு. மார்க்கன் ஜோன்ஸ் கேள்விக்கு ஆர். ஏ. பட்லர், திரு சரத்சந்திர போஸ் அரசியல் கைதியாக இருப்பதால் டெல்லி சட்டசபைக்கு அனுமதிக்க முடியாதென்று சொல்லியதாகத் தெரிகிறது.

* * *

ஸ்ரீநகரிலுள்ள ஸைன்டல் மொகல்லாவில் தீவிபத்து ஏற்பட்டது என்றும் உயிர்சேதமில்லை யாயினும் 50000 ரூ பெறுமானமுள்ள பொருட்சேதம் ஏற்பட்டது என்றும் டிஸம்பர் 8-ந்தேதி செய்தியறிவிக்கிறது.

* * *

வாடிபந்தர் ரயில்வே ஸ்டேஷனில் சம்பளவெட்டுக் காரணமாக 500 தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள் என்றும் சமரச முயற்சி இதுவரை பயன்படவில்லை என்றும் 8-ந் தேதி பம்பாய்ச்செய்தி யறிவிக்கிறது.

* * *

காங்கிரஸ் வாதி திரு. பொ. திருகூட சுந்தரம் பிள்ளை தமது மனைவியாருடன் டிஸம்பர் 6-ந்தேதி இரங்கூனுக்குப் புறப்பட்டுச் சென்றார். திரும்புவதற்குச் சுமார் 6 மாத காலமாகுமென்று தெரிகிறது.

* * *

ஓராண்டில் ஒரு மனிதன் சராசரி 1,1800,000 வார்த்தைகள் பேசுகின்றானும். ஆனால் ஓராண்டில் ஒரு மனிதன் ஒன்றும் சொல்லத் தெரியாமல் 9,46,00,000 முறை மிரள விழிக்கின்றானும்.

* * *

தங்கத்தை வெட்டியெடுத்து வர்த்தகம் செய்யும் தொழிலை முதன் முதலாகக் கையாடத் தொடங்கியவர்கள் உரோமர்கள்தானும். சுமார் 2000 வருடங்கட்கு முன் அத்தொழில் ஆரம்பமானதென்று சொல்லப்படுகிறது.

* * *

வைக்கோலிலிருந்து ஒரு வகை புதிய பலகை தயார் செய்யப்படுகிறது. அப்பலகை ஓக் மரம் போல் மிக உறுதியாகவும் ஆனால் கனமில்லாமலும், ஈரத்தில் ஊறாததாயும், தீப் பிடிக்காததாயும், எலிகளால் துளையிட முடியாததாயுமிருக்கின்றனவாம்.

* * *

கடற்சுங்கத்தீர்வை சம்பந்தமாக எந்தெந்த தேசங்கள் இத்தாலியாவிற்குச் சலுகை காட்டவில்லையோ அந்நாடுகளின் சரக்குகளுக்கு அதிகப்படும்படியான (நஷ்டஈடு) தீர்வைகள் விதிக்க நிதிமந்திரிக்கு அதிகாரம் இத்தாலியாவில் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

* * *

பெங்களூரில் உள்ள இந்திய சாஸ்திர ஆராய்ச்சிக் கழகத்திற்கு ஒரு கட்டிடம் கட்டிக் கொள்வதற்காக 10 ஏகர் நிலமும் கழக நடவடிக்கைகளைப் பிரசுரிப்பதற்கு வருஷத்திற்கு 3000 ரூ ஆக 5 வருஷத்திற்கும் மைசூர் மகாராஜா சன்மானம் கொடுத்திருக்கிறார்.

* * *

பரோடா சமஸ்தானத்திலுள்ள ஷார்பூர் குன்றில் கல்தோண்டும் பொழுது இரண்டு வைரங்கள் அகப்பட்டதாகவும், குன்றின் மீது வைரச் சுரங்கம் இருக்குமென்று, பந்தோபஸ்து செய்யப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது.

* * *

ஸில்ஹெட் ஜில்லாவை ஜெயிந்தாபரிகாணம் நீங்கலாக வங்காள மாகாணத்துடன் சேர்த்துவிட வேண்டுமென்று ராஜப் பிரதிநிதிக்கு, 200 அஸ்ஸாமைச் சேர்ந்த ஹிந்து முஸ்லீம்கள் தங்கள் கையொப்ப மிட்ட மகஜர் ஒன்றை அனுப்பியிருப்பதாகக் கல்கத்தா செய்தி கூறுகிறது.

* * *

ஆக்ரா நகரத்திலும், கண்டோன்மெண்டிலும் போலீஸ் படையை அதிகரிக்க உத்தரவிடப் பட்டிருக்கின்றதென்றும், அதற்கு சென்ற மூன்று மாத காலமாக இப்பிரதேசங்களிலுள்ள பொதுஜன நடத்தையே காரணம் என்று அலகாபாத் டிசம்பர் 8-ந் தேதிச் செய்தி கூறுகிறது.

* * *

புடா பெஸ்டிலுள்ள பௌத்த சங்கங்கள் 20 டன் எடையுள்ள ஒரு பெரிய மணியைச் செய்யத்திட்டம் போட்டுள்ளார்கள். இது 9 அடி உயரமும் 10 அடி சுற்றளவுமிருக்குமாம். இதற்கு 48000 டாலர் செலவாகுமென மதிப்பிடப் பட்டிருக்கிறது. இந்த மணியின் ஓசை 30 மைல் தூரம் கேட்குமாம்.

* * *

மேற்கு ஆஸ்திரேலியாவில் வசிக்கும் இந்தியர்கள் சட்டசபை வோட்டுரிமை பெறும் பொருட்டு இதுவரையுள்ள தடையை நீக்க ஒரு மசோதா மேற்கு ஆஸ்திரேலியச் சட்டசபையில் கொண்டு வரப்பட்டது. ஆஸ்திரேலியா இதர பகுதிகளில் இம்மாதிரியான தடை கிடையாது.

* * *

வகுப்புத்தீர்ப்புக் கண்டனத்தை யுத்தேசித்துண்டிதமதன்மோகன் மாளவியா முதலியவர்களுடன், தேசியவாதிகளையும் இதரர்களையும் ஒன்றுகூட்டி ஒரு மகாநாடு நடத்துவதாக நிச்சயிக்கப் பட்டிருப்பதாக யுனைட்டட் பிரஸ் நிருபருக்கு நம்பக்கூடிய இடத்திலிருந்து தகவல் கிடைத்திருக்கிறது என்று தெரிகிறது.

* * *

ஸ்ரீமதி கமலா நேரு போவாலி ஆரோக்கிய நிலயத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டதாகவும், அவரது தேகம் எக்ஸ்ரே பரிசீலனை செய்யப்பட்டதாகவும், அவரது சுவாசாசயத்தில் ஒருவித மான திரவபதார்த்தம் இருந்து வருவதாகவும், அவரது தேகநிலைமையில் சிக்கல் ஏற்பட்டதற்கு, அதன் உற்பத்தியே காரணம் என்றும் டிசம்பர் 9 தேதிச் செய்தி சொல்லுகிறது.

* * *

டிசம்பர் 8ந் தேதி மாலை கல்கத்தா சிரத்தானந்த பார்க்கில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீமதி ஜோதிராம் காங்குலி தலைமைவகித்தார். எம். என். ராய், சரத் சந்திரபோஸ், சுபாஷ் சந்திரபோஸ், இதர விசாரணையில்லா வங்காளக் கைதிகள் முதலிய யாவரையும் உடனே விடுதலை செய்ய வேண்டுமென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

* * *

மேற்கு இந்திய மிதவாதிகள் சங்கத்தின் கௌன்சில் கூட்டம் டிசம்பர் 7-ந் தேதி இரவு கூடி, கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கையைப்பற்றி ஆலோசனை செய்து ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அதில் பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள் சிபாரிசுகளில் ஒன்றையாவது ஒப்புக்கொள்ளாதது ஏமாற்றத்தை யளிக்கிறதென்றும், மாறுதல் செய்யாவிடில் ஏற்றுக்கொள்ள முடியாதென்றும் அந்த அறிக்கை கூறுகிறது.

* * *

இத்தாலியில் வசிக்கும் இத்தாலியரனைவரும் வெளிநாடுகளிலிருந்து தங்களுக்கு வர வேண்டிய கடன் தொகையாதாஸ்துகளைச் சர்க்காரிடம் 10 தினங்களில் ஒப்படைத்து விட வேண்டும் என்றும், அவர்களுக்கு இத்தாலிய நாணயத்தில் பணம் திருப்பிக் கொடுக்கப்படுமென்றும் சர்க்கார் உத்திரவின்படி நடந்து கொள்ளாதவருக்கு தண்டனை விதிக்கப்படும் என்றும், டிசம்பர் 8ந் தேதி இத்தாலியச் செய்தியறிவிக்கிறது.

* * *

பிரிட்டிஷ் அன்னிய விவகார மந்திரியான, ஸர். ஜான்ஸைமன் யுத்தத் தளவாடக் கம்பெனிகளிலிருந்து பணம் பெற்று வருவதாகவும், எனவே அன்னிய விவகாரங்களில் அவர் அக்கம்பெனிகளுக்குச் சாதகமான முறையில் நடந்துகொண்டு வருவதாகவும், வெளியான கூற்றுகள் சம்பந்தமாக, ஸர் ஜான் ஸைமன் சார்பாக நோட்டீஸ் பிறப்பிக்கப்பட்டிருப்பதாக ராய்டர் செய்தி கூறுகிறது.

* * *

காந்திஜீ பின்வரும் அறிக்கையை அஸோஸியேட்டட் பிரஸிற்குக் கொடுத்திருக்கிறார். "எல்லைப்புறமாகாணத்திற்கு விஜயம் செய்ய ஆலோசனை சம்பந்தமாக, சர்க்காருக்கும் எனக்கும் நடைபெற்றுவரும் கடிதப் போக்கு வரவு பற்றி பத்திரிகை நிருபர்கள் ஆதாரமற்ற செய்திகளை வெளிட்டு வருவதற்கு வருந்துகிறேன். அந்த அறிக்கைகளை நம்பக்கூடாது என்று நான் பொது ஜனங்களை எச்சரிக்கை செய்கிறேன். கூடிய சீக்கிரம் நான் ஒரு அறிக்கை வெளியிட உத்தேசித்திருக்கிறேன்."

* * *

பம்பாயைச் சேர்ந்த தொழிலாளர் தலைவி ஸ்ரீமதி மணிபென் காரா சமீபத்தில் திரு. எம். என். ராயைச் சந்தித்து அதுபற்றி யுனைட்டட் பிரஸ் நிருபருக்கு; திரு. ராயிக்குக் கண்டக்ஷயரோகத்தினால் அவருடைய எடை 40 ராத்தல் குறைந்து போய்விட்டது என்றும், அவரை விடுவிக்க முயற்சி செய்யவேண்டும் என்றும், அவருக்கு உடனே வைத்திய உதவி யளிக்க வேண்டும் என்றும் டிஸம்பர் 8-ந் தேதி கூறினார்.

* * *

பம்பாய், அலகாபாத்; ஆலைச் சொந்தக்காரர்கள், அகில இந்திய ஆலைச் சொந்தக்காரர் மகாநாட்டைக் கூட்ட முயன்று வருகிறார்கள் என்றும், தினம் 9 மணி நேர வேலை கொடுப்பதென்ற தொழிற் சட்டத்தைக் குறித்து ஆலோசனை செய்யப் போகிறது என்றும், ஆலையில் இரவு வேலை நடப்பதால் உற்பத்தி யதிகமாகிறதென்றும், ஆகவே இரவு வேலை நிறுத்திவிட முயலவும் இம்மகாநாடு கூட்டப்படுகிறது என்று டிஸம்பர் 8-ந் தேதி செய்தி யறிவிக்கிறது.

* * *

சுபாஷ் பாபு கல்கத்தா வந்து சேர்ந்த தினத்திலிருந்து 7 நாள் வரைதான் அவர் வீட்டில் தங்கியிருக்கலாம் என்றும், பிறகு அவர் ஐரோப்பாவிற்குத் திரும்பவேண்டும் என்றும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகவும், அதற்கு சுபாஷ் போஸ், தமது தந்தையின் சிரார்த்தக் கிரியைகளை முடிக்கவும், தேக நிலையைப்பற்றி வைத்தியரிடம் கலந்து கொள்ளவும் ஒரு மாதகாலம் அனுமதி கொடுக்கும்படி கவர்மெண்டிடம் கேட்டிருப்பதாகவும் தெரிகிறது.

* * *

திருவனந்தபுரத்தில் ரப்பர்த்தொழில் செய்ய ஏற்பாடாகி விட்டது. பிப்ரவரியில் மேனாட்டிலிருந்து தொழிலுக்கான இயந்திரங்கள் வந்துசேரும். ஏப்ரல் மாதத்தில் விற்பனைக்கு ரப்பர் சாமான்கள் வரும் காரச்சியைச் சேர்ந்த ரப்பர் நிபுணர் மிஸ்டர் ஹெலனின் மேற்பார்வையில் யாவும் நடைபெறுகின்றன. அவர் இந்தியாவில் திருவாங்கூரே ரப்பர்த் தொழிலுக்கு ஏற்றவிடமென்கின்றார். வட்டடயர், மோட்டார் டயர், ஓடுகள், விளையாட்டுச் சாமான்கள், குழாய்கள் முதலியன செய்யப்படும்.

# ஜஸ்டிஸ் கட்சியில் அமளி

## செட்டிநாடு குமார ராஜாவின் ராஜிநாமா

## திரு. அப்பாத்துரைப் பிள்ளை தேர்தல்

### கூட்டத்தின் விபரம்

சமீபத்தில் இந்திய சட்ட . சபைக்கு நடை பெற்ற தேர்தலில் ஜஸ்டிஸ் கக்ஷிப் பிரமுகர்களான சர். ஆர். கே. ஷண்முகம் செட்டியாரும், திவான்பகதூர் ஏ. ராமசாமி முதலியாரும் தோற்றதற்குக் காரணம் மேற்படிக் கட்சி அங்கத்தினர் சிலர் செய்த துரோகம் தானென்று சொல்லப்பட்டு வந்தது. இது சம்பந்தமாக ஜஸ்டிஸ் சட்டசபைக் கட்சிக் காரியதரிசியான (சீப் விப்) செட்டிநாடு குமார ராஜா மீது நம்பிக்கையில்லை தீர்மானமொன்று கொண்டு வரப்பட்டு அதைப் பற்றி ஆலோசிக்க டிசம்பர் 11ந் தேதி காலை 10 மணிக்கு ஜஸ்டிஸ் கக்ஷித் தலைவர் பொப்பிலிராஜா மாளிகையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தை நடத்தியே தீர வேண்டுமென்று சிலரும், நடத்த வேண்டாமென்று சிலரும், தோழர் ஈ. வே. ராமசாமியின் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டுமென்று வேறு சிலரும், நம்பிக்கையில்லா தீர்மானத்தை ஒத்தி வைக்க வேண்டுமென்று மற்று சிலரும், அபிப்பிராயம் தெரிவித்தார்கள். இந்த நடவடிக்கைகளில் பல சூழ்ச்சிகள் நடை பெற்றதாகவும் கேள்வி. எனினும் 11ந்தேதி காலையில் கூட்டம் நடைபெற்றது. ஜஸ்டிஸ் கக்ஷியைச் சேர்ந்த 51 சட்டசபை அங்கத்தினர் வரைக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். குமார ராஜா எம். ஏ. முத்தையா செட்டியாரவர்களும் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள்.

கூட்ட நடவடிக்கைகள் அந்தரங்கமாகவே நடைபெற்றன. பத்திரிகைப் பிரதிநிதிகள் உள்ளே விடப்படவில்லை. நடவடிக்கைகளின் முடிவு மட்டிலும் வெளியே காத்திருந்த பத்திரிகைப் பிரதிநிதிகட்குக் கூறப்பட்டது.

### அரசியல் ஆலோசனை

முதலில் சமீபத்தில் வெளியான ஜாயிண்டு பார்லிமெண்டரிக் கமிட்டி யாதாஸ்தைக் குறித்து யோசிக்கப்பட்டதென்றும் அது பற்றி ஒரு அறிக்கை வெளியிடும்படி சர் ஏ. பி. பத்ரோ, பார்லிகிமிடி ராஜா, திருவாளர்கள் அப்பாதுரைப் பிள்ளை, யாகையாலி, வி. பி. ராஜகோபால் பிள்ளை, ஆர். ஸ்ரீனிவாசன், வி. ஐ. முனுசாமிப் பிள்ளை, என். சிவராஜ், வெங்கடகிரி குமார ராஜா இவர்களடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது என்றும் தெரிகிறது.

### நம்பிக்கையில்லை தீர்மானம்

பின் ஜஸ்டிஸ் சட்டசபைக் கட்சி காரியதரிசி (கொரடா) செட்டிநாடு குமாரராஜாமீது நம்பிக்கையில்லை என்ற தீர்மானத்தை வெங்கடகிரி குமார ராஜா பிரேரேபித்தார். ஸர். ஏ. பி. பத்ரோ அதை ஆமோதித்தார். டாக்டர் ஸி. நடேச முதலியார் ஆதரித்துப் பேசினர். உடன் கனம் முத்தையா செட்டியார் (குமார ராஜா) தமது நிலைமையை விளக்கி 9 பக்கம் கொண்ட ஒரு யாதாஸ்தைப் படித்து விட்டு தமது சட்டசபை ஜஸ்டிஸ் கட்சித் தலைமைப் பதவியையும், நிர்வாகச் சபைத் தலைமைப் பதவியையும் ராஜிநாமா செய்துவிடுவதாகக் கூறினர்.

பின் பொப்பிலி ராஜா இந்த ராஜிநாமாவை அங்கீகரிக்கலாம் என்று கொண்டு வந்த தீர்மானம் நிறைவேற்று.

குமாரராஜாவின் ஸ்தானத்தில் திவான்பகதூர் அப்பாத்துரைப் பிள்ளை (கொரடாவாக) தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### குமார ராஜா அறிக்கை

குமார ராஜா முத்தையா செட்டியாரவர்கள் படித்த அறிக்கையின் சாரமாவது:—

என்னிடம் கட்சிக்கு நம்பிக்கையில்லையேல் கொரடாவாக இருப்பதில் எனக்கு விருப்பமில்லை. கட்சியின் நன்மையைக் கருதி என் கண்ணியத்தை விடுவதற்கு நான் தயார். இதுகாறும் குற்றமில்லாமல் நான் வேலை செய்தேன் என்று தற்பெருமை பாராட்டிக் கொள்வதற்கு மனமில்லை. நவம்பர் 5-ந் தேதி நமது கட்சியைச் சேர்ந்த பிரபலஸ்தர்களால் நான் மேயர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்றேன். சமீபத்தில் நடைபெற்ற சட்டசபைத் தேர்தலில் சர். ஷண்முகம் செட்டி, திரு. நடேச முதலியார் இவர்கட்காகச் செட்டிநாட்டிலும், சிதம்பரத்திலும் தேர்தல் சம்பந்தமான பண உதவியைச் செய்தேன். நவம்பர் 3-ந்தேதியும் கட்சித் தலைவர் வேண்டுகோளுக்கிணங்கி 2500 ரூபாய் அவரிடத்தில் கொடுத்தேன். நம்பிக்கையில்லா தீர்மானத்திற்குக் காரணஸ்தர் யாரென்று விளங்கவில்லை. சட்டசபைத்தேர்தல் முடிவு வெளியான மறுதினம் கக்ஷிப்பிரமுகர்களில் சிலரின் வஞ்சனையால் தோல்வியேற்பட்டுவிட்டது என்று ஜஸ்டிஸ் பத்திரிகை தலையங்கம் எழுதிற்று. ஆரம்பத்தில் சென்னையிலுள்ள ஐரோப்பிய வர்த்தகர் மீதும் ஜஸ்டிஸ் கக்ஷியைச் சேர்ந்த சில தலைவர்கள் மீதுமே புகார் செய்துகொள்ளப்பட்டது. ஆனால் சீக்கிரத்தில் நானே துரோகம் செய்தேன் என்று மாற்றிவிடப்பட்டது. கக்ஷிப்பத்திரிகை இவ்வாறு என்னைக் குற்றம் சாட்டியது அவதூறாகும். கக்ஷியில் பிளவு ஏற்படுமெனக் கருதி நான் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை. மேற்படி அவதூறை எதிர்த்துச் சொல்ல சர். ஷண்முகம் செட்டியார் முன்வராதிருந்துவிட்டார். இதரர்களும் உண்மையைக் கூறி அவதூறைமாற்ற முயலாதிருந்துவிட்டார்கள். டிசம்பர் 4-ந்தேதி தான் பத்திரிகைகளில் என் மீது நம்பிக்கை இல்லை தீர்மானம் வரப்போவதாக எழுதப்பட்டிருந்ததைக் கண்டேன். அந்தச் செய்தியைப் பல பத்திரிகைகள் தகுந்த சந்தர்ப்பமாக எடுத்துக்கொண்டன. அதோடு எனக்கு விரோதிகளாகிய பலர் அது பற்றிப் பிரசாரம் செய்யவும் தலைப்பட்டார்கள். ஆகையால் என் மீது கொண்டு வரப்பட்டிருக்கும் பழி சுமத்தலைப்பற்றி இன்று பேசுவதில் பயனில்லை. இந்தப் பழியைச் சுமத்துவது மிகவும் எளிது. தேர்தல் முடிவு வெளிப்பட்டவுடன் எனது தந்தை பொப்பிலி ராஜாவைச் சந்தித்துப் பேசியபோது அவர் பலர் துரோகம் செய்துள்ளார்களென்றும் அந்த ஜாபிதாவில் என் பெயரடங்கியிருக்கிறதென்றும் சொன்னர். உடன் சர் செட்டியாருக்குக் கடிதமெழுதியதில் அவர் தவருக ஏதும் நினைடாததாக எழுதியிருக்கிரூர்.



[இவ்வாறு படித்த யாதாஸ்தில் சர் ஷண்முகம் செட்டியார் ராஜா சர் அவர்கட்கும் திரு. ஸி. வி. ஸி. டி. வெங்கிடாசலம் செட்டியாருக்கும் எழுதிய சில கடிதங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் சர் செட்டியார் செட்டிநாடு ராஜாவின் உதவிக்கு நன்றி தெரிவிப்பதாகவும், அவரது வேலை முறையைப் பற்றி சந்தேகமில்லையென்றும் குமார ராஜாவைப்பற்றிப் பிரசாரம் செய்யப்பட்டு வருவதற்குத் தாம் பொருப்பாளியல்லவென்றும் குறிப்பிட்டிருக்கிரூர். பின்னும் யாதாஸ்தில் சொல்லப் பட்டிருந்ததாவது:—]

5-ந்தேதி இக்கூட்டம் நடைபெறுவது பற்றிய நோட்டீஸ் ரஜிஸ்தர் தபால் மூலம் எனக்குத் தெரிவிக்கப்பட்டது. நான் பத்திரிகைகளில் நடக்கும் பிரசாரத்தைப் பற்றிக் கடிதமெழுதினேன். பொப்பிலி ராஜா அதுபற்றி விவாதம் வேண்டாமென்று பதில் கூறிவிட்டார். சர் ஷண்முகத்துக்கு ஏராளமான ஓட்டுகள் கிடைத்தனவென்று திவான் பகதூர் முருகப்ப செட்டியாரே பத்திரிகைகட்கு எழுதியுள்ளார். நவம்பர் 3-ந் தேதி சர் ஷண்முகம் தாம் 100 அதிகப்படியான ஓட்டுகளால் வெற்றிபெறக் கூடுமென்று கருதி சென்னையிலிருந்து கோவைக்குப் பிரயாணமானுர். எனவே மேயர் தேர்தலைப்பற்றிய புகார்கட்கு இடமில்லை. என்மீது கூறப்படும் குற்றத்திற்கு பாரபக்ஷமற்ற முறையில் விசாரணை செய்வதே நியாயம். தக்க பரிஹாரம் பெற நான் இதுவரை செய்து வந்த முயற்சிகள் வீணுயின; ஆதலின் நான் பிரதமக் கொரடா பதவியையும் நிர்வாகக் கமிட்டித் தலைவர் பதவியையும் ராஜிநாமா செய்கிறேன்.



## காரைக்குடி

### விருந்துகள்

(நமது நிருபரிடமிருந்து)

9-12-34-ந் தேதி மாலை இவ்வூர் நகரசபைத் தலைவர் திருவாளர் மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கட்கு இவ்வூர் நகரத்தார் ஹைஸ்கூலில் ஒரு விருந்து நடத்தினர். விருந்திற்கு ஆயிரக் கணக்கானவர் வந்திருந்தனா. ஹானரபில் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார். தலைவருக்கும் விருந்தினர்க்கும் காரைக்குடி நகரத்தார் சார்பாக உபசாரப் பத்திரங்கள் படித்துக் கொடுக்கப்பட்டன. சபைத் தலைவராலும் நகரசபைத் தலைவராலும் பதில் சொல்லப்பட்டன. அதன்பின் இருதலைவர்களையும் பாராட்டிப் பலர் பேசினர். உபசாரங் கூறப்பட்டுச் சங்கீதக் கச்சேரியுடனும் வாண வேடிக்கையுடனும் கூட்டம் நிறைவெய்தியது. இரவு திரு. மெ. செ. மெ. மெ. அவர்கள் வீட்டில் ஏராளமானவர்கட்குச் சாப்பாடு நடந்தது. அதன்பின் முசிரி பாட்டுக் கச்சேரி நடைபெற்றது.

* * *

7-12-34 மாலை இவ்வூர் நகரசபை உபதலைவர் டாக்டர் சுப்பிரமணியம் M.B., B.S. அவர்கட்குக் காரைக்குடி மகா ஜனங்களால் முத்துப்பட்டினம் கிருஷ்ண விலாஸ் மண்டபத்தில் ஒரு விருந்து அளிக்கப்பட்டது. தேவகோட்டை சப்கலெக்டர் ஸ்ரீமான் டி. எஸ். சுவாமிநாதன் ஐ. ஸி. எஸ். அவர்கள் தலைமை வகித்தார். சபைத் தலைவருக்கும் முக்கிய விருந்தினர்க்கும் உபசாரப் பத்திரங்கள் படித்துக் கொடுக்கப்பட்டன. பலர் விருந்தினரைப் பாராட்டிப் பேசினா. விருந்தினர் தலைவர் பதிலுடனும் உபசாரத்தோடும் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## அமராவதிபுதூர்

### இளைஞர் ஊழியர் சங்கம்

இச்சங்கத்தின் வாராந்திரக்கூட்டம் 6-12-34 வியாழக்கிழமை மாலை 6 மணிக்கு காந்தி சமதர்ம பாடசாலையில் கூடிறறு. அபபொழுது சங்கத்து அங்கத்தினர்களும் மறறவர்களும வந்திருந்தனா. தோழர் S. T. வாசன் அவர்கள தலைமை வகித்தார். "கைத்தொழிலும் இயந்திரமும்" என்ற விஷயத்தைப் பற்றி தோழர்கள், பரமசிவன, நாராயணன், ஷண்முகம், சுப்பையா, முதலியோர் வெகு விரிவாக விளக்கிப் பேசினா. தலைவர் தமது முடிவுரையில் கைத்தொழிலும் இயந்திரமும சேர்ந்துதான போகவேண்டும என்று சொல்லி கடைசியில் ஏகமனதாகக் கைத்தொழில் இல்லாமல் இயந்திரமாத்திரம் போதாது என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. கூட்டம் 8 மணிக்குக் கலைந்தது என்று தோழர் வெங்கடாஜலம் அறிவிக்கிரூர்.

நியூஜிலாந்து தீவின் மத்தியிலுள்ள "ஞாருகோ" என்ற எரிமலை சென்ற வியாழக்கிழமை முதல் முழங்கவும் புகைவிடவும் தொடங்கியிருக்கிறது. 6000 அடி உயரத்தில் புகை கிளம்புகின்றது. சுமார் 100 மைல் தூரத்திலிருந்து புகையைப் பார்க்கலாமாம். இரண்டுமூன்று நிமிஷத்திற்கொருதரம் 'குப்' 'குப்' என்று புகை வெளி வருவது பயத்தை உண்டு பண்ணுகின்றதாம். எரிக்குழம்பு மேலே எழும்பி மீண்டும் உள்ளே விழுந்துவிட்டது.




## வட்டி விகிதம்.

இம்பீரியல் பாங்கு:—மூன்றரை பெர்
[செண்டு.

இங்கிலீஷ் பாங்கு:—இரண்டு பெர்
[செண்டு.

இரங்கூன் நடப்பு வட்டி.
0—4—0
பவ-வருஷ ஐப்பசி

இரங்கூன் தவணை வட்டி.
0—3—6
ஆடி 7-உ

சிங்கப்பூர் நடப்பு வட்டி.
0—4—9
பவ-வருஷ ஐப்பசி

சிங்கப்பூர் 3 மாத தவணை வட்டி.
0—4—0
ஐப்பசி 1-உ

கோழும்பு நடப்பு வட்டி.
0—6—0
நவம்பர்

செய்கோன் நடப்பு வட்டி.
0—5—3
பவ-வருஷ சித்திரை
0—5—3
தவணை வட்டி

சென்னை நடப்பு வட்டி
0—8—0
பவ சித்திரை
0—7—6
வைகாசி
0—7—0
ஆனி
0—6—6
ஆடி
0—6—0
ஆவணி
0—6—0
புரட்டாசி
0—6—6
ஐப்பசி

## உண்டியல் விலை.

ஸ்டொபிட்ல் விற்பனை . 157¼
„ 30' நாள் தவணை வாங்குவது 150

## ரப்பர்.

லண்டன், டிசம். 10உ

புகைப்போட்ட ரப்பர் (ஸ்டாண்டர்டு)

வாங்குவோர் விலை 6 5/16 பென்ஸ்.

புகைப் போட்ட ரப்பர் விற்பவர் விலை
6 3/8 பென்ஸ்.

லண்டன் லிவர்பூல் ரப்பர்

இன்று லண்டன் ரப்பர் இருப்பு 69337 டன். டிசம்பர் 8-ந்தேதி யோடு முடிந்த வாரத்தில் செலவான ரப்பர் 698 டன்.

லிவர்பூல் இருப்பு 60125 டன். சென்றவாரம் வெளியே அனுப்பப் பட்ட ரப்பர் 450 டன்.

## தங்கம், வெள்ளி.

சென்னை, டிசம். 11உ

சவரன் (சில்லரை) 22—0—0
„ மொத்தமாக 21–15—0
ஆலைத்தங்கம் தோலா 1-க்கு 34–13—9
மூலா தங்கம் „ 34—6—0
வெள்ளி
1 ரூபா எடைக்கு 0—11—0
100 ரூபா எடைக்கு 66—8—0

## கப்பல்.

ரங்கூன்

எரின்புரா: 14ந் தேதி ரங்கூனுக்குப் புறப்படும்.

அங்கோரா: டிசம்பர் 17ந் தேதி வந்து 21ந் தேதி புறப்படும்.

எரின்புரா: டிசம்பர் 24ந் தேதி வந்து 28ந் தேதி புறப்பட்டுச் செல்லும்.

வெள்ளிக்கிழமை தோறும் ரங் கோனுக்கு மெயில் கொண்டு போகப் படும்.

லண்டன்

கிளான் மாதிசன்: டிசம்பர் 11ந்தேதி வரும்.
„ ராஸ்: „ 22ந்தேதி வரும்.

மலேயா

ரோணு: டிஸம்பர் 15-ந் தேதி வந்து 18-ந் தேதி புறப்படும்.

ரஜுலா: டிசம்பர் 29ந் தேதி வந்து 1935 ஜனவரி 1ந் தேதி புறப்படும்.

பினங்கு

அரோண்டா: டிஸம்பர் 7-ந் தேதி வந்து 8-ந் தேதி புறப்படும்.

பாண்டிச்சேரி, சிங்கப்பூர், செய்கோன்

பார்த்தாஸ்: டிசம்பர் 25-ந் தேதி வரும்.

சாண்டிலி: 1935 ஜனவரி 22ந்தேதி வரும்.

அஜே லி ரிடோ: பெப்வரி 20ந் தேதி வரும்.

---

சில மீன்களுடைய உடலின் மீது "பாஸ்பாஸ்" என்ற வஸ்து இருப்பதனால் அவற்றிலிருந்து ஒளி பிரகாசிக்கிறதாம். மீன்களின் தலை வால் கண், இவைகளின் அவ்வொளி சுடர்விட்டு வெகுதூரம் வரை ஒளிதருகிறதாம். இவ்வினத்தில் பச்சை, சிகப்பு, மஞ்சள், வெங்காய நிறம், முதலிய ஒளிகளைத் தரும் சக்தியும் இருக்கின்றதாம்.

---

# ஊழியன்

## பயிண்டு வால்யம்

ஊழியன் இதுவரை வெளியான மலர் 14-ல் பதின்மூன்று இதழ்களும் சேர்த்து அழகிய காலிகோ பயிண்டு செய்யப் பெற்றிருக்கிறது.

ஆரம்பமுதல் விரும்பும் பலர் சவுகரியத்துக்காகவே தயாரித்திருக்கிறோம்.

வேண்டுவோர் முந்திக்கொள்க. கொஞ்சம் பிரதிகளே இருக்கின்றன.

ஏராளமான படங்கள்! உயர்ந்த பல கட்டுரைகள்! காதற் கதைகள்! கருத்தமைந்த பாடல்கள்! சிறந்த காலிகோ பயிண்டு! 624 பக்கங்கள்.

**விலை ரூ. 2. தபாற்கூலி வேறு.**

மானேஜர்,
"ஊழியன் ஆபீஸ்,"
56, தம்புச் செட்டித் தெரு, சென்னை.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

